# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 48] இரக்தாக்ஷி ஆண்டு ஐப்பசித்திங்கள் 10-11-84 [இதழ் 1



தருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

## ஸ்ரீ குருஞானசம்பந்தர்

### அருள்வாக்கு

முற்றவஞ் செய்து மறந்தவர்க்
கேஅருள் மூர்த்திகொள்ளக்
கற்றவன் ஞானப் பிரகாச
தேசன் கமலையில்வாழ்
வுற்றவன் முன்சென்றுயிர்ப்பாச
நீக்கிக்கொண்டுண்மைநிலை
பெற்றவர்க்குண்டு; பெருதவர்க்
கேயிலை பேரின்பமே.

— ஞானப்பிரகாசமாலை 2


ஆசிரியர் :-

வித்துவான்
இராமலிங்கத் தம்பிரான்
சுவாமிகள்

துணையாசிரியர் :-

மகாவித்துவான்
சி.அருணைவடிவேல்முதலியார்



உ

குருபாதம்

# " ஞானசம்பந்தம் "

தருமையாதீன திங்கள் இதழ்

மலர் 43 | 10-11-84 | இதழ் 12


## உட்பொருள்





உ
குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 43 | இரக்தாக்ஷி-ஐப்பசி-10—11—84 | இதழ் 12

திருச்சிற்றம்பலம்

பொன்தயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினாய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே.

— திருஞானசம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்

## இணையிலாத் தலைவர் இந்திராகாந்தி

"நான் உயிர் இழக்க அஞ்சவில்லை. என் உடலிலிருந்து சிந்தும் ஒவ்வொரு துளி இரத்தமும் இந்நாட்டு மக்களின் முன்னேற்றத்திற்கு உதவுமாயின்மரணத்தைமகிழ்ச்சியுடன்வரவேற்பேன்."

— ஒரிஸ்ஸாவில் 30—10—84ல் இந்திராகாந்தி பேசியது.

### இந்திரா காந்தியை இழந்தோம் :

இந்திரா காந்தி அவரது இரு மெய்க்காவலர்களால் சுட்டுக் கொல்லப்பட்டார். இக்கொலை மிகக் கொடுமையானது - கோரமானது. அக்கிரமமானது - அநீதியானது. நினைக்கவே நெஞ்சம்

நிலைகுலைந்து நடுங்குகிறது. இந்தியத் துணைக்கண்டம் கண்ணீர் வெள்ளத்தில் மூழ்கிக் கலங்கித் தவிக்கிறது.

இந்திரா காந்தியின் தலைமை இணையில்லாதது - ஈடு செய்ய முடியாதது - இட்டு நிரப்ப முடியாதது என்பதில் ஐயமில்லை. கட்சிக்காரர்களும், கட்சிக்கு அப்பாற்பட்டவர்களும், எதிரிகளாக வாழ்ந்தவர்களும், எதிர்க்கட்சியினராக எதிர்த்தவர்களும், இந்திராகாந்தியின் முடிவை எண்ணி வருந்துகின்றனர் - அவர்தம் சேவையைப் போற்றிப் பாராட்டுகின்றனர். அணிந்துரை பேசி அகம் உருகி நிற்கின்றனர். அணிசேரா நாடுகளும், அணியாகப்பிரிந்து நிற்கும் வல்லரசுகளும் - உருசியநாட்டு அதிபரும் அமெரிக்கநாட்டு ஜனாதிபதியும் நெஞ்சம் நெகிழ்ந்து வருந்தி வாழ்த்தினர் - புகழாரம் சூட்டிப்போற்றி வருகின்றனர்.

இந்திரா காந்தியை இழந்தோம். மாதர்குல மாமணியைத் தோற்றோம். நாட்டுக்கே தன்னை அர்ப்பணித்த அன்னையைப் பறிகொடுத்தோம். இஃது இந்தியாவில் ஒவ்வொரு குடிமகனுக்கும் ஏற்பட்ட தனிப்பட்ட இழப்பாகக் கருதப்பட்டுக் கலங்கி நிற்கிறோம்.

## இந்திரா காந்தியின் ஈடற்ற சாதனைகள் :

நேரு சிறையிலிருந்த போது தம் மகளுக்கு நிருபங்கள் தீட்டினார். அக்கடிதங்கள் " தந்தையிடமிருந்து மகளுக்குக் கடிதங்கள் " எனப் பின்னர் புத்தக வடிவிலே வெளிவந்தது. அதில் நேரு எழுதிய ஒருவாசகம் கருதத்தக்கது. " **வரலாறு படிப்பது நல்லது தான். ஆனால் வரலாறு படைப்பது அதனினும் நல்லது.** " இந்திரா காந்தி வரலாறு படைத்து வாழ்ந்தார். அதுவும் இந்திய வரலாற்றிலேயே புதிய பல அத்தியாயங்களைப் படைத்தார். இந்திய வரலாற்றிலே அம்மையார் ஆட்சி செய்த 16 ஆண்டுக்காலம் உண்மையாக உன்னத காலம். சரித்திரப் புகழ்பெற்ற சாதனைகள் பல புரியப்பட்டன என்பதை எவரும் ஒப்புவர்.

பாக்கிஸ்தான் - இந்தியா போரின் போதும், சைனா இந்தியாவைத் தாக்கிய போதும் இந்திரா காந்தி காட்டிய இணையற்ற வீரம் நாம் மறக்க முடியாதது. நிதானத்துடனும் தைரியத்

துடனும், விவேகத்துடனும் வீரத்துடனும், அம்மையார் செயல் பட்ட முறையில் அவரது அரசியல், ராஜதந்திர அறிவு நன்கு புலனாயிற்று. பங்களாதேஷ் உருவாவதிலே இந்திரா காந்தியைப் பலரும் குறை கூறிய போதும் – பாடுபட்டு வெற்றி கண்டார் – பின்னர் பலரும் அவர்தம் திறத்தை வியந்தனர்.

14 பாங்குகளைத் தேசிய மயமாக்கியது பாரத நாட்டு மக்களுக்கு இந்திரா காந்தி புரிந்த ஈடற்ற சேவையாகும். அந்த பாங்குகள் மூலம் ஏழை எளிய மக்களுக்கு ஏராளமான கடனுதவி செய்யப்பட்டு வருகிறது. கிராமங்களிலே பாங்குகள் திறந்து கிராம விவசாய மக்களுக்குப் பேருதவி புரியக் காரணமாக இருந்தார் இந்திரா காந்தி அம்மையார். வானொலி மூலம் விவசாய மக்களுக்கு விவசாய அறிவை ஊட்டி முன்னேற்றம் அடையச் செய்தார்.

இந்திய ராணுவத்தை நவீனப் படுத்த காரணமாக இருந்தார் இந்திரா. சென்ற ஆண்டு ராணுவத்திற்காக ரூபாய் 5800 கோடி செலவிடப்பட்டது. எத்திக்கிலிருந்து பகை நாடுகள் தாக்கினாலும் எதிர்த்து நிற்கும் ஆற்றல் மிக்க படையை உருவாக்கிய சிறப்பு இந்திராகாந்திக்கு உரியது. இந்திரா காந்தியின் இருபது அம்சத்திட்டம் இந்திய மக்களுக்கு ஏற்றதாக இருந்து வருகிறது. அதில் பல அம்சங்கள் நடைமுறைப் படுத்தப்பட்டு வருகின்றன.

### ஜனநாயகத் தலைவர் :

இந்திரா காந்தி ஜனநாயகத்தின் காவலர். சமதர்மத்தின் சேவகி. இந்திரா ஜனநாயகத்தை எந்த அளவுக்கு வளர்த்தார் என்பதற்கு வேறு எடுத்துக்காட்டு வேண்டுவதில்லை. ஜனநாயக முறைத் தேர்தலில் தானே தோல்வியை ஏற்றுக் கொண்டார். இந்திராவுக்கு எவரும் இணையில்லை என்று கண்ட மக்கள் மீண்டும் அவருக்கு வாக்களித்தனர். மீண்டும் ஆட்சிப் பொறுப்பை அவரிடம் ஒப்புவித்தனர். இந்திரா காந்தி இரண்டாம் முறை ஆட்சிக்கு வரும் போது பாராளுமன்றினிலே முன்றில் இரண்டு பங்குப் பெரும்பான்மை பெற்றார் என்றால் அம்மையாரின் பெருமைபேசிமுடியாதது அல்லவா? இந்திராவின் மறைவு இந்தியாவுக்கு எவ்வளவு பெரிய இழப்புபாருங்கள் !

**ஆசி, அனுதாபம் :**

நம்வணக்கத்திற்கும் வழிபாட்டிற்கும் உரிய ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் திரு. ராஜிவ்காந்தி அவர்களுக்கு ஓர் அனுதாபச் செய்தி தந்தி மூலம் கொடுத்தார்கள். " இந்திரா காந்தியின் கொலைச்செய்தி அகில மக்கள் அனைவருக்கும் அதிர்ச்சியைத் தந்தது. இப்பெரிய இழப்பினைத்தாங்கும் ஆற்றலை இறைவன் உங்களுக்கு அருள்புரிவானாக! இந்நாட்டை நல்லமுறையில் வழிநடத்திக் காக்கவும், உங்களுக்கு உலகப் புகழ் கிட்டவும் வாழ்த்துகிறோம் " எனச் சுருக்கமாக - ஆனால் பெருக்கமான பொருள் பொதிந்த முறையிலே - அனுதாபச் செய்தி அனுப்பப்பட்டது.

**ராஜிவ் காந்தி பிரதமர் ஆனார் :**

இந்திரா காந்தியின் திருமகனார் ராஜிவ் காந்தி பிரதமராகத் தேர்ந்து எடுக்கப்பட்டுள்ளார். சிலர் குறை கூறக்கூடும் - பாரதநாட்டு ஆட்சி பரம்பரையாக நேரு குடும்பத்திற்கு உரியதா? என்று உரையாடவும்படுகிறது - காதால்கேட்கிறோம்.

நேருகுடும்பம் தியாகத்திற்குப் பேர்பெற்றது. அக்குடும்பம் அண்ணல் காந்தியடிகளால் போற்றப்பட்டது - பாராட்டப் பட்டது. பண்டித மோதிலால் நேரு பாரத நாட்டின் பால் பாசமும் நேசமும் கொண்ட தேசபக்தர். அவர் வழிவந்த பண்டித ஜவகர்லால் நேரு சுதந்திர இந்தியாவின் சிற்பிகளில் ஒருவர். வாழ்நாள் முழுமையையும் தேசவிடுதலைக்கும் தேச முன்னேற்றத்திற்குமே தம்மை அர்ப்பணித்துக் கொண்டவர் அகில உலக அரசியல் அரங்கிலே இந்தியாவின் பெருமையை உயர்த்திவிட்ட உத்தமர். அவர் வழி வந்த இந்திரா காந்தி அம்மையார் நேரு வழியிலே சென்று பாருக்குள்ளே இந்தியாவைப் பலம்பொருந்திய சக்தியாக ஆக்கியவர். நேரு நிறுவிய அணிசேரா நாடுகளின் அமைப்பை அம்மையார் மேலும் பலம் பொருந்தியதாக ஆக்கி அந்த நிறுவனத்தின் தலைவராக இருந்து தனிச்சிறப்புக் கொண்டவர். அமெரிக்காவும், உருசியநாடும் ஆற்றல்மிக்க இருஅணிகளாகப்பிரிந்து நின்றன. மற்றநாடுகள் இவ்விரு அணிகளில் ஏதாவது ஒன்றில் இணைய வேண்டும் - வேறு வழி இல்லை. ஆனால் அணிசேரா நாடுகள் அமைப்பு, அத்தகைய நாடுகளைத் தன்னுட் கொண்டு தான் ஒரு தனிச்

சக்தியாக - மூன்ருவது உலக சக்தியாகத் திகழ்கிறது. இதில் தற்போது நூற்றுக்கு மேற்பட்ட நாடுகள் உறுப்புநாடுகளாக உள்ளன. இஃது உலகில் கடுபிடிப்போர் நிலையை மாற்றி உலகில் அமைதிநிலவ உதவுகிறது. இந்திராகாந்தியின் திருமகனுர் தன் தாயுடன் இருந்து போதிய பயிற்சி பெற்றவர். நேரு வகுத்த வழியிலே - இந்திரா காந்தி சென்றதுபோல, இந்திரா காந்தி வழியிலே ராஜிவ் காந்தி செல்வது இயல்பாகும் -ஏற்றது மாகும். வேறு ஒருவரைப் பிரதமராகத் தேர்ந்து எடுப்பதைவிட ராஜிவ் காந்தியைப் பிரதமராகத் தேர்ந்து எடுத்தது விரும்பத்தக்க தாகும் - அதுவே விவேகமும் ஆகும். இத்தேர்வினைச்சரியான நேரத்தில் சரியான முறையில் செய்த காங்கிரஸ் பாராளுமன்ற போர்டு உறுப்பினர்களை நாம் பாரட்டுகிருேம்-வாழ்த்துகிருேம்.

## எல்லாம் தெய்வச் செயல் :

எல்லாம் தெய்வத் திருவருள் எனக் கொள்வோமாக! ராஜிவ் காந்தி அறிவும் அடக்கமும் ஆற்றலும் உள்ள நாற்பது வயதே நிரம்பிய இளைஞர். அவர்காட்டும்வழியில் இந்தியமக்கள் அனைவரும் செல்வார்களாக! அதுவே இந்திராகாந்தியின் மறைவுக்கு நாம் காட்டும் நன்றிக் கடனுகும். மனதைத் திடப் படுத்திக் கொள்வோம். துயரை மறப்போம். கண்ணீரைத் துடைத்துக் கொள்வோம். கடமையை நிறைவேற்றுவோம். பண்டித மோதிலால் நேரு கூறியதைப் பின்பற்றுவோம். “அயராது உழைத்துக் கடமையைப் புரிபவர் ஒருவகை. பிறர் உழைப்பைக் கொண்டு தாம் உயர்ந்து நின்று வாழ்பவர் மற்ருெரு வகை” நாம் நம் கடமையை முறையாக, நன்ருக அயராது செய்வோம். மோதிலால் கூறியதில் முதல் வகையைப் பின்பற்றுவோம். தெய்வத்தின் திருவருளை எனந்து கேற்ற முடன் பணி ஆற்றுவோம்! தெய்வம் முன் நின்று காக்கும். எனவே நமது ஆதீன ஆதிபரமாசாரியர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கை எண்ணி அமைதி பெறுவோமாக.

அவரவருக் குள்ளபடி ஈசனரு ளாலே
அவரவரைக் கொண்டியற்று மாலுல் — அவரவரை
நல்லார்பொல் லாரென்று நாடுவதென்? நெஞ்சமே
எல்லாம் சிவன்செயலென் றெண். — குருஞானசம்பந்தர்.

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

26 ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்

திருச்சிராப்பள்ளி, தேசியக் கல்லூரியில்
தத்துவ மேல்நிலைக் கல்வியினைத் தொடங்கிவைத்து

வழங்கியருளிய

# ஆசியுரை

6—8—1984

" போற்றும் தகையன பொல்லா முயலகன் கோபப்புன்மை
ஆற்றும் தகையன ஆறு சமயத் தவரவரைத்
தேற்றும் தகையன தேறிய தொண்டரைச் செந்நெறிக்கே
ஏற்றும் தகையன இன்னம்பரான் தன் இணையடியே "

— அப்பர்.

**சமயமும் தத்துவமும் :**

இன்றைய தினம் இந்த தேசியக்கல்லூரியில் தத்துவ மேல் நிலைக்கல்வி தொடக்கம் நடைபெறுகிறது. தத்துவம் என்பதைக் குறித்தும் சமயம் என்பதைக் குறித்தும் முதலில் சிந்திப்பது அவசியம். 'தத்துவம்' என்னும் சொல்லுக்கு நேர் ஆங்கிலச் சொல் 'Philosophy' என்பதாகும்.

'Philo' 'Sophia' என்னும் இரு கிரேக்கச் சொற்களும் சேர்ந்தே 'Philosophy' என்று ஆகிறது.

'Philo' என்றால் நேசித்தல் என்று பொருள் 'Sophia' என்றால் ஞானம் என்று பொருள். எனவே 'Philosophy' என்றால் ஞானத்தை விரும்புதல் என்று பொருள் படுகிறது. ஆனால் கடவுளைப்பற்றி, உயிர்களைப்பற்றி, உலகத்தைப்பற்றி அறியும் அறிவு என்ற பொருளில் வழங்கி வருகிறது. 'தத்துவம் என்னும் வடமொழிச் சொல்லுக்கு 'அது நீ' என்பது பொருள். 'தத்துவமஸி' என்றால் அது நீ ஆகின்றாய் என்பது பொருள். இது ஒரு மகாவாக்கியம்.

இங்ஙனம் 'தத்துவம்', 'Philosophy' என்னும் சொற்களுக்குப் பொருள்கள் பல இருப்பினும் நம்முடைய மொழியில் 'தத்துவம்' என்ற சொல்லை மெய்ப்பொருள் காண்டல்-மெய்ப்பொருளியல் என்னும் பொருளிலேயே கையாண்டு வருகின்றோம். தத்துவம் என்பது வளர்ந்த நிலையில் முடிந்த முடிபாக முகிழ்க்கும் கருத்தாகும். சமயம் என்பது மெய்ப்பொருளுணர்வு தோன்றும் நிலையைக் குறிப்பதாகும். தத்துவம் வேறு சமயம் வேறு என்பது மேலைநாட்டார் கொள்கை. நம்முடைய நாட்டில் அவை இரண்டையும் ஒன்றாக இணைத்துக் காண்பதே மரபாகும்.

'சமயம்' என்னும் சொல்லுக்குச் சமைத்தல் என்பது பொருள். சமைத்தல் என்றால் பக்குவப்படுத்தல் என்பதாகும். உணவுப்பொருள்களை உண்பதற் கேற்றவகையில் பக்குவப்படுத்தலைச் சமைத்தல் என்கிறோம். அதுபோல் மனித சமுதாயத்தைப் பக்குவப்படுத்தி அதனை உயர்த்தும் நோக்கில் தோன்றியனவே சமயங்கள் ஆகும். சமயங்கள் பலவாக இன்று காணப்படுகின்றன. அவை அனைத்தும் மனித முன்னேற்றத்திற்காகத் தோன்றியனவே. அவை தோன்றிய சூழ்நிலைகள் சிந்திக்கப்படவேண்டியதொன்றாகும்.

## சூழ்நிலை தந்த கருத்து :

எங்ஙனம் மனிதன் சூழ்நிலையால் உருவாகின்றானோ அதே போலச் சமயக்கருத்துக்களும் ஆங்காங்குள்ள சூழ்நிலைகளுக் கேற்பத்தோன்றிவளர்ந்து இன்று பலவாகக்காட்சி தருகின்றன. சமயக்கருத்துக்களின் தோற்றம் குறித்து ஒன்றிரண்டை இப்பொழுது சிந்திக்கலாம்.

இஸ்லாமிய சமயத்தில் வட்டி வாங்குதல் கூடாது என்னும் கருத்து மிகவும் வலியுறுத்திப் பேசப்படுகின்றது. அரேபிய நாடுகள் பலவும் பாலைவனப் பகுதிகளில் உள்ளன என்பது அனைவருக்கும் தெரியும். அங்கு ஒட்டகங்கள் போக்குவரத்துக்குப் பயன்படக் கூடிய மிகப்பெரிய சாதனம் ஆகும். அவ்வொட்டகங்களை அடமானம் வைத்து ஏழை எளிய மக்கள் செல்வந்தர்களிடம் பணம் பெறுவது வழக்கம். காலப்போக்கில் செல்வந்தர்கள் கொஞ்சம் கொஞ்சமாக வட்டியைக் கணக்கிட்டுக்காட்டி அந்த ஒட்டகங்களைக் கைப்பற்றி விடுவார்கள். இந்தக் கொடுமையைக் கண்ட நபிகள் நாயகம், இச்செயல் பலரைக்கெடுத்து ஒருவன் வாழ்வதாக இருத்தலால் இது அறவே கூடாது என்று வற்புறுத்தினார். இதனால் இஸ்லாமிய சமயத்தில் வட்டி வாங்குதல் கூடாது என்னும் கொள்கை தோன்றியது.

செல்வந்தர்கள், பொதுவாகப் பொருளீட்டுவதிலேயே கருத்தைச் செலுத்துகிறார்களே தவிர அறநெறி அருள்நெறி பற்றிச் சிந்திப்பதே இல்லை. இப்படிப்பட்டவர்களுக்கு மோட்சம் கிடைப்பது இயலாதஒன்று. எனவேதான் இயேசுநாதர் ஊசியின் காதில் ஒட்டகத்தை நுழைத்தாலும் நுழைக்கலாம்; பணக்காரன் மோட்சத்திற்குப் போகமுடியாது என்றார். இது அவர் வாழ்ந்த சூழ்நிலையில் விளைந்த கருத்தாகும்.

புலால் உண்டு கொண்டிருந்தவர்கள் வாழ்ந்தகாலத்தில் தோன்றிய புத்தர் புலாலை அறவே உண்ணக்கூடாது என்று கூறினால் மக்கள்ஏற்கமாட்டார்கள் ஆதலால் சூழ்நிலைக்கேற்ப படிப்படியாக அதனை மாற்ற எண்ணினார். முதலில் கொன்று உண்ணுதல்கூடாது; தானாகஇறந்தால் அதை உண்ணலாம் என்றார். இது புத்தர்காலச் சூழ்நிலை.

மனிதர்கள் பெண்கள்மீது காம இச்சை கொண்டு அலைந்து திரியும் சூழ்நிலையைக் கண்ட சமணர்கள் மனிதர்கள் உய்தி பெறப் பெண்களை வெறுப்பதையே ஒரு வழியாகக் கூறினார்கள். அவர்கள், புத்தர்களைப் போலவே ஜீவகாருண்யத்தையும் முக்கியமாக வலியுறுத்தினார்கள்.

இங்ஙனம் சமயங்கள் பலவும் அவை அவைகளும் சூழ்நிலைகளுக்கு ஏற்பவே கருத்துக்களைக் கூறின எல்லாச் சமயங்களும் மனித நாகரிகத்தை உயர்த்தவும் மனிதவர்க்கம் ஈடேற்றம் பெறவும் தோன்றியனவே என்று கொண்டு சமயக் காழ்ப்பின்றி அவ்வவர்கள் கொள்கைகளில் நின்று உய்தி பெறுவது நலம்பயப்பதாகும்.

## மாவும் மாக்களும் :

அறிவு என்பது எல்லா ஜீவராசிகளிடத்தும் இருக்கிறது. தொல்காப்பியர் ஓரறிவு முதலாக ஆறு அறிவு ஈறாக உயிர்களின் அறிவைப் பகுத்துக் கூறுகின்றார். விலங்குகளுக்கும், பறவை களுக்கும், தாவரங்களுக்கும் கூட அறிவும் தற்காப்புணர்வும் உள்ளன கோல் கொண்டு அடிக்கப்போனால் மாடு ஓடுகிறது; பள்ளத்தின் அருகில் செல்லும் ஆடு அதற்குள் வீழ்ந்து விடுவ தில்லை இவற்றால் அவைகளுக்கு மேற்சொன்ன அறிவும்தற்காப் புணர்வும் உள்ளன, என்பதை உணர்ந்து கொள்ளலாம் தாவர வகைகளில் ஒன்றாகிய தொட்டால் சிணுங்கி என்ற சிறுசெடியை நாம் தொட்டால் தன் இலையைச் சுருக்கிக் கொள்வதைக் காணலாம். ஆனால் இவ்விலங்குகளுக்கும் தாவரங்களுக்கும் தாம் பெற்றிருக்கிற அறிவை - உணர்வை வளர்த்துக் கொள்ளத் தெரியாது இந்நிலையிலேயே மனிதர்களிலும் பலர் வாழ்ந்து

வருகின்றனர். அவர்களுக்கு உண்ணவும் உறங்கவும்தெரிகிறது; தற்காத்துக்கொள்ளத் தெரிகிறது; தன் இனத்தின் மீது பாசம் காட்டத் தெரிகிறது. இவை தவிர வளர்ந்த அறிவும் உயர்ந்த உணர்வும் அருள் உள்ளமும் அவர்களிடத்தில் இல்லை. இவர்கள் இப்படியே பிறந்து வளர்ந்து மடிந்துவிடுகின்றனர். இவர்கள் மனிதர்கள் போல் தோற்றம் கொண்டு வாழ்ந்தாலும் விலங்குகள் போலவே வளர்ச்சியின்றி வாழ்ந்து மடிந்து போவதால் ஆறு அறிவு படைத்த மக்களாகக் கருதப்பட மாட்டார்கள் என்பார்தொல்காப்பியர். இவர்களைத்தொல்காப்பியர் 'மாக்கள்' என்னும் சொல்லால் குறிப்பர் "மாவும் மாக்களும் ஐயறி வினவே" என்பது அவர் கூறும் நூற்பா.

## சமயம் தத்துவம் யாருக்கு ?

இனி இச்சமயங்களின் தத்துவங்களின் தேவையைப்பற்றி ஒருசிறிது சிந்திப்போம். மனித அறிவு வளர வளர அவர்களின் நிலைகளுக்கேற்பச் சமயங்களும் தோன்றி வளரலாயின. மனிதனாகத் தோற்றம்கொண்டு வாழ்வதோடு மட்டுமல்லாமல் உணர்விலும் அறிவிலும் வளர்ச்சி பெற்று மன உணர்வு வளர்ச்சி பெற்ற நிலையில் வாழ்பவர்களே மனிதர்கள் என்று கருதப் படுவர். தொல்காப்பியர் இதனை, "உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே" என்னும் நூற்பாவில் கூறுகிறார். இங்கு உயர்திணை என்மனார் மக்கள் என்னாது மக்கட்சுட்டே என்று அவர் கூறியிருப்பதைச் சேனாவரையர் போன்றோர் விளக்கியுள்ளனர். மனிதனைக் சுட்டி உணரும் தன்மை இருந்தால் ஒழிய காட்சி அளவைக்கு மனிதனைக் காணுவோர் அனைவரும் உயர்திணை ஆகமாட்டார் என்பது அவர் கருத்து. எனவே மனிதப்போர்வையில் வாழ்வோரை ஜனநாயக் கணக்கில் மனிதர்களாகக்கொண்டாலும் தத்துவக் கணக்கில் அங்ஙனம் கொள்ள முடியாது என்பது உண்மையாகிறது மன உணர்வை வளர்த்துக்கொள்பவனே மனிதனாகிறான். ஆகவே விலங்கோடு விலங்காகவாழும் மனிதர்கள் அவ்விலங்கின் தன்மையிலிருந்து மனவளர்ச்சி பெற்று மனிதப்பிறவியின் பயனை உணர்ந்து வளம்பெறுதற்கே, சமயங்களும் தத்துவங்களும் தோன்றின - பாகுபடுகின்றன என்பதை அனைவரும் உணர்தல் அவசியமாகும்.

## பல்வகைச் சமயங்கள் :

இனி சமயங்களின் பகுப்புக்களைப் பற்றிச் சிந்திப்போம் காணும் உலகே உள்பொருள் என்றும் இது தவிர வேறு ஏதும் இல்லை என்றும் கூறுவோர் உலோகாயதர். இவர்கள், பூதங்களின் சேர்க்கையினால் உடல் இயக்கம் பெற்று பின் அச்சேர்க்கை மாற அது அழிகிறது என்னும் கொள்கையுடையவர்கள்.

சங்கரர் பரமான்மாவே உள்பொருள். அதுவேஜீவான்மாக்களாக உலகமாகக் காட்சிதருகிறது என்று கூறுவர். பரமான்மாவும் ஜீவான்மாவும் வேறுவேறுனது அல்ல என்பது அவர் கொள்கை. இவர் ஒன்றுதான் உள்பொருள் என்றமையால் இவர் கொள்கை ஏகான்மவாதம் என்று பேசப்பெறுகிறது.

மத்துவர் ஜீவான்மாவும் பரமான்மாவும் உள்பொருள் என்ருர். இரண்டுபொருள் உள்பொருள் என்றமையால் இவர் கொள்கை 'துவிதம்' என்று பெயர் பெறும். துவிதம் என்ருல் இரண்டு என்பது பொருள். பரமான்மாவும் ஜீவான்மாவும் ஆகிய இரண்டும் வேறு வேருனவை என்பது இவர் கொள்கை.

இராமானுஜர் பரமான்மா, ஜீவான்மா, உலகம் என்ற முப்பொருளும் உள்பொருள் என்ருர். இவர் கொள்கை 'விசிஷ்டாத்வைதம்' என்று பெயர்பெறும். முப்பொருள் உண்மை கூறுவதில் இது சைவசித்தாந்தத்துடன் ஒத்துநிற்கிறது.

வைணவர்கள், சைவ சித்தாந்தம் கூறும் 36 தத்துவங்களில் முதற்கண் உள்ள ஆன்மதத்துவம் 24 ஐயும் உடன்பட்டு அவற்றிற்கு மேல் திருமால் பரம்பொருளாக உள்ளார் என்று கூறுவர்.

சைவசித்தாந்தம் இவற்றையும் உள்ளடக்கி 36 தத்துவங்களின் வழி தன்கொள்கையை நிறுவுகிறது. ஆன்மத்துவம் 24, வித்தியாதத்துவம் 7. சிவதத்துவம் 5என அதுபிரிவுபெறும். இந்த சைவசிததாந்தம் கடவுள், ஆன்மா, உலகம் இம்மூன்றும் அநாதி என்று கூறும். உலகம்என்பது பாசம்என்று பெயர்பெற்று அது மூன்ருகப் பிரியும். ஆணவம், கன்மம், மாயை என்பன அவை. ஆணவக் கருவறையில் கட்டுண்ட உயிருக்கு இறைவன் மாயையைத் துணையாகக் கூட்டிபிறவியைக் கொடுத்துக்கர்மங்களைச் செய்யச் செய்து ஆணவத்தின் வலிமையைப் போக்கி உயிரைத் தன்னுடன் இரண்டறக் கலக்கச் செய்வன்; இதுவே பேரின்பம், முத்தி, விடுதலை, வீடு எனப்பேசப்பெறும். இதுவே சைவ சித்தாந்தம். கடவுள் என்று உண்டோ அன்றே ஆன்மாவும்உண்டு என்றும் இரண்டும் வேறு வேருனவைஎன்றும் சைவ சித்தாந்தம் கூறும். "என்று நீ அன்று நான் உன் அடிமை அல்லவோ" என்பர் தாயுமானுர்.

## இருபெரும் வகை :

இந்தியாவில் தோன்றிய சமயங்களை இரு பெரும் பிரிவுகளாகப் பிரிப்பர். ஒன்று வைதிக சமயம்; பிறிதொன்று

அவைதிக சமயம். வேதத்தை உடன்படுவன அனைத்தும் வைதிக சமயங்களாம். வேதத்தை மறுத்துத் தோன்றிய சமயங்கள் அவைதிக சமயங்களாம். உலோகாயதம், சமணம், பௌத்தம் என்பன அவைதிக சமயங்கள். ஏனையவை வைதிக சமயங்கள். இவ்வைதிக சமயங்கள் அனைத்தையும் உட்கொண்டு முடிந்த முடிபாகிய கொள்கையைக் கூறிய சமயம் சைவசித்தாந்தமே ஆதலின் இதனை 'இராசாங்கச் சமயம்' என்றார் தாயுமான அடிகள்.

" மயல்அறு மந்திரஞ் சிட்சை சோதிடாதி
மற்றங்க நூல்வணங்க, மௌன மோலி
அயர்வறச் சென்னியில் வைத்து ராசாங்கத்தில்
அமர்ந்தது வைதிக சைவம் அழகி தந்தோ !

என்பது அவர்தம் அருள் வாக்கு.

இத்தகைய சமயதத்துவங்களை ஆய்வு செய்ய வேண்டுவது இப்பொழுதுள்ளோரின் இன்றியமையாக் கடனாகும். புற உலக ஆய்வை மேற்கொள்வது மட்டும் அல்லாமல் அக உலக ஆய்வை மேற்கொள்ள வேண்டுவதும் அவசியமாகும். விஞ்ஞானம் கண்ணுக்குப் புலனாகும் புறப்பொருள்களை ஆய்வு செய்வது. மெய்ஞானம் கண்ணுக்குப் புலனாகாது கருத்துக்குப் புலனாகும் அகப் பொருள்களை ஆய்வு செய்வது. இத்தகைய சமய தத்துவங்களை ஆய்வு செய்ய வேண்டுவது அவசியம் என்று கருதியே தருமபுரத்தில் சமீபத்தில்தத்துவ ஆய்வு மையம் ஒன்று தொடங்கப்பெற்றிருக்கிறது. அவ்வகையில்இந் ஈதேசியக் கல்லூரியில் தத்துவ மேல்நிலைக் கல்விவகுப்பு இன்றுதொடங்கி இருப்பது வரவேற்கத் தக்கதாகும்.

**வாழ்த்து :**

இக்கல்வி மென் மேலும் வளர்ந்தோங்கவும் இதில் பயிலும் மாணவர்கள் நான் யார், என் உள்ளம் யார், ஞானங்கள் யார், என்னும் தத்துவக் கல்வியில் சிறந்து நன்மணிகளாய்த்திகழவும் நாட்டின் முன்னோடிகளாய் இக்கல்லூரி நிர்வாகிகளும் முதல்வரும் பேராசிரியர்களும் மாணவர்களும் எல்லா நலன்களும் பெற்று நீடு வாழவும் எல்லாம் வல்ல ஸ்ரீ செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

தத்துவம் வளர்க.

சமயம் வாழ்க.

# சித்தாந்த சைவமும் வீர சைவமும்


## மேதகு B. D. ஜாட்டி அவர்கள்

முன்னாள் துணை ஜனாதிபதி


[ அனைத்துலக சைவ சித்தாந்தக் கருத்தரங்கு 1984 மே 11, 12, 13 ஆகிய தேதிகளில் தருமை யாதீனம் திருநெறியதெய்வத் தமிழ் மன்றத்தில் நிகழ்ந்தபோது முன்னாள் துணைஜனாதிபதி மேதகு B. D ஜாட்டி அவர்கள் கருத்தரங்கைத்தொடங்கி வைத்து அரியதொரு சொற்பொழிவு ஆற்றினார் கள். அவரது ஆங்கிலச் சொற்பொழிவு தமிழாக் கம் செய்யப்பட்டு இப்பகுதியில் வழங்கப்படு கிறது. தமிழாக்கம் – 'செந்தில் குமரன்.' ]

( சென்ற இதழின் தொடர்ச்சி )

### முடிவான மெய்ப்பொருள்

சைவ சித்தாந்தத்தில் முடிவான மெய்ப் பொருளை " பதி " என அழைக்கப் படுகிறது வீரசைவத்தில் லிங்கம் எனக் குறிக்கப் பெறுகிறது. எல்லாருக்கும் நிலையான தலைவராக நிலவு வதால் அவர் " பதி " எனப் பெயர் பெறுகிறார். சர்வக்ஞன இறைவன் சிவன் எனவும் அரன் எனவும் லிங்கம் எனவும் பேசப் படுகிறார்.

கடவுள் (பதி, லிங்கம் எனப் பகரப்படுபவர் ) உள்ளிருந்து இயக்குபவனாகவும் கடந்து நிற்பவனாகவும் இருக்கிறார். அவர் சகல மங்கள குணநிசயங்களுக்கும் இருப்பிடமாக உள்ளார். அவர் உணர்தற்கு அரியவர் பிரபஞ்சத்துயரங்களாலே சிறிதும் பாதிக்கப் படாதவராகத் திகழ்கிறார்.

### பிரபஞ்சத் தோற்றம்

சைவசித்தாந்தம்முப்பொருள் உண்மையினை–பதி ( கடவுள்) பசு (உயிர்), பாசம் (தளை) இம்மூன்றையும் ஏற்றுக்கொள்கிறது. இவை யாவும் நிலையானவை – அழியாதவை. தோற்றத்தின் நோக்கம் கணக்கற்ற கட்டுற்ற ஆன்மாக்கள் விடுதலைகருதியே ஆகும். எனவே அன்பு மயமான அரன் இப்பிரபஞ்சத்தைத்

தோற்றுவித்த காரணமே கட்டுண்டு கிடக்கும் ஆன்மாக்களை அவனது அருளாலே ஆதரித்துக் காத்து விடுதலை செய்யும் பொருட்டே ஆகும்.

சைவசமயம் பிரபஞ்சத் தோற்றத்திற்கான மூன்று காரணங் களையும் ஏற்கிறது. அவையாவன : ஆற்றல் மிக்க காரணமாகிய ஆண்டவன்; துணைக்காரணமாகிய அவனது சக்தி; பொருட் காரணமாகிய மாயை (Efficient cause, Instrumental cause and Material cause )

வீரசைவம் பிரபஞ்ச பரிணமம் பற்றி அவிக்ரப பரிணமத் தையும், சைவசித்தாந்தம் பிரக்கிருதி பரிணமத்தையும் ஏற்றுக் கொள்கின்றன. மற்ற தத்துவங்கள் சாக்கியம், வைசேஷிகம், அத்வைதம், விசிஷ்டாத்வைதம் ஆகியவை முறையே சத்கார்ய வாதம், ஆரம்பவாதம், விவர்த்த வாதம், பரிணம வாதம் ஆகிய வற்றை ஏற்றுக் கொண்டுள்ளன.

## ஆன்மாக்கள்

சைவ சித்தாந்தத்தின்படி ஆன்மாக்கள் நித்தியமான நிலைப் பொருள்கள்; அவை கடவுளினின்று வேறுபட்டவைகளாகும். பந்தமுற்ற ஆன்மாக்கள் பசுக்கள் என அழைக்கப்படுகின்றன. ஆன்மாக்கள் மூன்று விதமாகப் பகுக்கப்பட்டுள்ளன : சகலர், பிரளயாகலர், விஞ்ஞானகலர்.

வீரசைவத்தின் படி ஆன்மாக்கள் உண்மையிலே தூய்மை யானவை, நிரந்தரமானவை; சகலவல்லமையுடையவை. அவை சிவன்தனது இயல்பையே தம்மியல்பாகக் கொண்டவை. நெருப்பினின்று ஒரு பொறி, அதனின்று வேறுபடாதது போல அவை சிவனினின்று வேறுபடாதவை ஆகும்.

## பாசங்கள்

சைவ சித்தாந்தத்திலே பாசம் நித்தியப் பொருளாகும். சிவானுபவத்தை அடைய பாசங்கள் தடையாக உள்ளவை. மூன்று பாசங்களாவன : ஆணவம், கன்மம், மாயை. அவை நித்தியமானவை – அநாதியானவை.

வீரசைவமும் மும்மலங்களையும் ஏற்கிறது. ஆனால் சிவன் தன் திருவிளையாடலால் ஆன்மாக்களின் சக்தியைக் ஜீவன் களுக்குக் குறைத்தளித்து இருக்கிறன்.

## மெய்யுணர்வு சாதனங்கள்

சைவசித்தாந்தத்தின்படி சிவனே குருவடிவிலே வந்து ஒவ்வொரு ஆன்மாவும் வீடுபேறு அடைய உதவுகிறார். தீக்கை குருபிரானாலே அருளப் படுகிறது. இத்தீக்கை ஆன்மாவை ஆன்மீகப்பாதையில் உய்த்து உயர் நிலை எய்தப்படுத்தற்கேயாம். சமய தீக்கை மட்டுமன்றி மற்ற வகைகளிலேயும் மனோ பக்குவத்திற்காகவும் ஆன்மப் பக்குவத்திற்காகவும் அளிக்கப் படுகின்றன. ஆன்ம விடுதலை சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு மார்க்கங்களிலே அருளப்படுகிறது. யாத்ரீகனின்மேம்பாடு இந்தநான்குமார்க்கங்களிலும்பல்வகைப் பட்ட நிலைகளையுடையது என்பது கவனிக்கத்தக்கதாகும்.

வீரசைவத்தின் படி, தீக்கை சீடரை ஆன்மீகப்பாதையில் செலுத்த அருளப்படுகிறது. குருபிரான் மூவகை தீக்கையை நிகழ்த்துகிறார். அவை வேதம், மந்திரம், கிரியை என்பனவாகும். இவற்றின் நோக்கம் ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும் மலங்களையும் நீக்குதற் பொருட்டே ஆகும். மேலும் இதன் மூலம் சீடனுக்கு முறையே பாவலிங்கம், பிராணலிங்கம், இஷ்டலிங்கம் ஆகியவற்றை அருள்வதற்கும் முத்தித்துறை யிலே ஒவ்வொருவருக்கும் விடுதலை தரவும் தீக்கை பெறப் படுகிறது. எனவே ஆன்மீக விடுதலை அனைவருக்கும் ஜாதி, கோட்பாடு, பால் முதலிய பேதம் இன்றி, சகல மக்களுக்கும் அனுமதிக்கப்படுகிறது.

வீரசைவத்தின் விசேடத் தன்மைகள் பஞ்சாட்சரம், அஷ்டாவரணம், சத்ஸ்தாலம் ஆகியவையாகும்.

சைவசித்தாந்தமும் வீரசைவமும் பக்தி, ஞானம், கிரியை ஆகியவற்றிற்குச் சமமான முக்கியத்துவம் கொடுத்து இலங்கு கின்றன. பிரிக்கமுடியாத இம்மூன்றின் இணைப்பு ஆன்மீக முன்னேற்றத்தைத் தீவிரப்படுத்துகிறது. இரண்டும், முத்திநிலை அடைவதற்கு ஒருவன் இவ்வுலக வாழ்வினைத்துறக்க வேண்டிய அவசியம் இல்லை என்பதை அழுத்தமாகத் தெளிவுபடுத்து கின்றன. இவை வாழ்வின் எல்லாத் துறைகளிலும் நிறைவை வற்புறுத்துகின்றன.

எனவே சைவசித்தாந்தமும், வீர சைவமும் மக்களிடையே சகோதரத்துவத்தையும், நெறிமுறையிலே சமுதாய முறையிலே ஆன்மீக முறையிலே அவர்கள் மேம்படுவதையும் ஸ்தாபிப் பதை நோக்கமாகக் கொண்டுள்ளன.

---

கடிதம் :

# லண்டன் சைவசித்தாந்த அறிஞரின் பாராட்டு

[ லண்டன் சைவசித்தாந்த நிலையம் மற்றும் சர்வோதய சேவாச்சிரமம் ஆகிய இரு நிறுவனங்களின் தலைவரும், சைவசித்தாந்தம் மற்றும் தமிழ் இலக்கியம் சம்பந்தமான நூல்கள் பல எழுதியவருமான 'சைவத் தமிழ் மணி' திரு. கிருஸ்ண ஞானசூரியன் Msc ; C. Chem. M. R. S. C. அவர்கள் தருமையாதீனவெளியீடான '(திருமூலர் அருளிய திருமந்திரத்தின்படி) சைவ சித்தாந்தத்தின் முடிந்த முடிபு ஒன்றுதான் இருக்கமுடியும்' என்ற நூலின் ஆசிரியருக்கு ஒரு பாராட்டுக் கடிதம் எழுதியுள்ளார். அக்கடிதத்தின் உரிய பகுதிகள் வருமாறு :]

ஹவாய் சைவர்களுக்கு அளிக்கும் பதிலாக உருவாக்கப்பட்ட தங்களது மிகச்சிறந்தபுத்தகத்தை * அன்புகூர்ந்து தாங்கள் எனக்கு அனுப்பியதற்கு மிக்க நன்றி,

சைவ சித்தாந்த ஆதார மூலங்களைப்பற்றிய தங்கள் பரந்த அறிவையும், கருத்திற் பதியவைக்கும் மற்றும் நம்ப வைக்கும் திறனோடு அவற்றை எடுத்தாளும் தங்கள் ஆற்றலையும் பயன் படுத்திப் பேரும் புகழுமுடைய நம் தருமபுரம் ஆதீனம் இப்பெரும் பணியைச் செய்துள்ளது.

---

* தருமையாதீனச் சார்பில் திரு. T. N. அருணசலம் B. A. B. L. அவர்களால் 'There can be only one final conclusion in Saiva Siddhantam (According to Thirumular)' என்றதலைப்பில் ஆங்கிலத்தில் எழுதப்பெற்றது இந்நூல்.

கொள்கை அடிப்படையிலான பிரச்சினைகளுக்கு வணக்கத்திற்குரிய தருமபுர ஆதீனமே பதிலளிப்பது மிகச் சிறந்ததென யான் எண்ணியதை இதற்கு முன் எழுதிய தொரு கடிதத்தில் தெரிவித்திருந்தேன். இப்பணியைத் தாங்கள் பாராட்டிற்குரிய முறையில் செய்து முடித்திருக்கிறீர்கள்.

போற்றத்தக்க இந்தப் பதிலை, கீழை நாடுகளிலும் மற்றும் மேலை நாடுகளிலும் உள்ள சைவர்களாகிய எல்லோரது சார்பிலும் தாங்கள் மிகத்திறம்பட அளித்துள்ளமைக்கு நாங்கள் தங்களை உவந்து பாராட்டும் கடப்பாடுடையோம்.

ஹவாயினர் நம் சைவ சமயத்திற்குச் சிறிது பிரசாரப் பணியைச் செய்து வருகிறார்கள் என்பது உண்மைதானென்றாலும் காலத்தாற் பழமையானவையும், நாம் நினைவிற் செறிவாகப் பேணிவருபவையும், மற்றும் விஞ்ஞான பூர்வமாக மெய்ப்பிக்கப் பட்டனவுமாகிய கொள்கைகளில் தலையிட்டு அவற்றை மாற்ற விரும்பும் இவர்களை அதுவும் நம் சமயத்தில் சேர்ந்து பத்தாண்டுகளுக்குள்ளாகத்தான் ஆகும் இவர்களை அப்படித் தலையிட அனுமதித்தல் கூடாதென நான் உறுதியாக எண்ணுகிறேன்.



---

## தில்லைச்சிற்றம்பலமே சேர்

ஓடுகின்ற நீர்மை ஒழிதலுமே உற்றாரும்
கோடுகின்றார் மூப்புங் குறுகிற்று — நாடுகின்ற
நல்லச்சிற் றம்பலமே நண்ணுமுன் நன்னெஞ்சே
தில்லைச்சிற் றம்பலமே சேர்.

— ஐயடிகள் காடவர்கோன்.

தருமையாதீனத்தில் நடைபெற்ற
அனைத்துலக சைவசித்தாந்தக் கருத்தரங்கின்
இரண்டாம்நாள் நிகழ்ச்சியில் கலந்துகொண்டு,
அருள்மிகு அஷ்டாதசபுஜ மகாலட்சுமி துர்க்காதேவியின்
திருக்கோயிலில் மகாமண்டபத்தைத் திறந்து வைத்து,
தமிழக அரசு அறநிலையத்துறை அமைச்சர்
மாண்புமிகு. இராம. வீரப்பன் அவர்கள்
வழங்கிய

# பேருரை

( சென்ற இதழின் தொடர்ச்சி )

## பல ஆலயங்களுக்குச் செல்கிறேன் :

" நூற்றுக்கணக்கான படிகளையெல்லாம் ஏறி மலைமீது உள்ள ஆண்டவனையும் வழிபட வேண்டிய கட்டாயத்திற்கு ஆளாகியிருக்கிறேன். சந்நிதானம் அவர்களுக்கேதெரியும். மலைக் கோட்டை குடமுழுக்கு விழாவில் கடைசிவரை மலைமீது ஏறி வந்தேன், அதைப்போல் ஒருநாள் பட்டப்பகலில் 12மணிவெய்யி லில் கொண்டுபோய்த் தருமபுரியில் விட்டார்கள். அங்குள்ள தொன்மையான ஆலயத்திற்கு வரவேண்டுமென்றார்கள். 11-30 மணிக்கு ஏறிய நாங்கள் 2-30 மணிக்கு இறங்கினோம். நான் இதைச் சொல்லுவதற்குக் காரணம், இன்றைக்கு இந்த ஆலயங் களுக்குள்ளே நுழைகிற ஒரு சந்தர்ப்பம் கிடைத்ததற்குப் பிறகு இதனுடைய ஆரம்ப அறிவையே பெற்றுக்கொள்கிற வாய்ப்பை எங்களைப் போன்றவர்கள் அடைகிறோம். எந்த அளவிற்கு நம்மிடத்திலே இந்த ஆலயங்களுடைய வழிபாட்டைப்பற்றி - அமைப்பைப்பற்றி - ஆலயங்களுடைய தேவையைப் பற்றிச் சாதாரண மக்களிடையே எடுத்துச் சொல்லாமல் இருந்திருப் பார்கள் என்பதற்காகச் சொல்கிறேன். குறிப்பாகப் புரிந்து கொள்ளாமலிருந்திருப்பார்கள் என்பதற்காகச் சொல்லுகிறேன்.

## மக்களுணர்வுக் கண்ணாடி :

நம்முடைய 'முத்தமிழ்க் காவலர்' அவர்கள் இந்த வழி பாட்டிலே ஒரு முறையைக் கொண்டு வரவேண்டாமா என்ற

ஒரு பிரச்சனையின் அடிப்படையிலே சில கருத்துக்களைச் சொன்னார்களே! அவர்களுடைய சிந்தனைக்காகவும் இதை வைக்கிறேன். ஆகவே இத்தகைய அறநிலையத் தொடர்பை ஏற்படுத்திக்கொண்டதற்குப் பிறகு நான் சைவ ஆலயத்திற்குப் போகிறேன்; வைணவ ஆலயத்திற்குப் போகிறேன்; அம்பாள் ஆலயத்திற்குப் போகிறேன். அந்த ஆலயங்களின் பெயராலே பெரியவர்களாக விளங்கிக் கொண்டிருக்கிறவர்களைச் சந்திக்க வேண்டிய நிர்ப்பந்தம் வருகிறது. நேற்று முன்தினம் கூட மயிலாப்பூருக்குச் சென்றிருந்தேன். அங்குவந்து பார்க்க வேண்டும் என்று சிலர் அழைத்தார்கள். அங்குச்செல்ல வேண்டிய அவசியம் எனக்கு என்னவென்றால் அங்கு என்ன தான் செய்கிறார்கள்? ஏன் அப்படி அங்கு மக்கள் போகிறார்கள் என்பதைத்தெரிந்து கொள்வதற்கும் நான் அங்குச்செல்கிறேன். அதைத் தெரிந்து கொள்ளாமல் நாம் எப்படி ஒரு முடிவுக்கு வருவது என்பதற்காகவும் போகிறேன். ஒரு அறநிலையத்துறை அமைச்சராக இருக்கிறவர் இவ்வளவு ஆழ்ந்து ஆழ்ந்து இந்தத் துறையினுடைய வரலாறுகளை, சிறப்புக்களை இதற்கு இருக்கின்ற அடிப்படை உணர்வுகளைப் பற்றித்தெரிந்து கொள்ளவேண்டு மென்று முயற்சித்து அப்படித் தெரிந்துகொள்கிறபோது கண்ட றிந்த சில உண்மைகளை—இந்த நாட்டினுடைய வரலாற்றுச்சிறப் புக்களை – பெருமைகளை இங்கே எடுத்துச் சொல்லுகின்ற ஒரு அறிவும் ஆற்றலும் எனக்கு இந்த ஐந்தாண்டுகளிலே கிடைத் திருக்கிறது என்பதற்காக இதை நான் சொல்லுகிறேன். அப்படிச் சொல்வதனாலேதான் பலருடைய கருத்துக்களிலே யிருந்து மாறுபடுகிறேனோ அல்லது பலருடைய கருத்துக் களுக்கு முரணாகச் சொல்லுகிறேனோ என்கிற ஐயப்பாடுகள் வந்து கொண்டு இருக்கின்றன. இந்தச் சமுதாயத்திலே சமய உணர்வு, ஆன்மீக உணர்வு நிச்சயம் பாதுகாக்கப்பட வேண்டும் – அதை எந்த முறையிலே பாதுகாப்பீர்களோ எனக்குத் தெரியாது – அதற்கு நீங்களெல்லாம் தலைமையேற்று நடத்திச் செல்லவேண்டும் என்பதுதான் நான் தமிழ்நாட்டு மக்களின் சார்பிலே உங்களிடம் வைக்கின்ற கோரிக்கையாகும். இதற்கு என்ன வழியைக் கண்டுபிடிப்பீர்களோ எங்களுக்குத் தெரியாது. நாங்கள் மக்களைச் சந்திக்கிறபோது மக்களுடைய எண்ணங்களைத்தெரிந்து கொள்கிறோம். மக்களுடைய உணர்வு களைப் பிரதிபலிக்கிற கண்ணாடிகளாக நாங்கள் விளங்குகிறோம். ஒவ்வொரு நேரத்திலேயும் அந்தஉணர்வுகள் மாறுபடுகின்றன. சூழ்நிலைகள் வேறுபடுகின்றன.

### ஆன்மீகத்தை அழிக்கமாட்டேன் :

நான் ஒன்றைச் சொல்ல விரும்புகிறேன். முதல் முதலிலே தமிழ்நாட்டிலே மதமாற்றம் நடைபெற்றது என்கிற செய்தியை வெளியிலே ஒருபொது நிகழ்ச்சியிலே பகிரங்கமாக அறிவித்தது நான்தான். ஒரு அமைச்சர்- ஒரு அரசாங்கத்திலே இருக்கிறவர்- இன்றைக்கு எங்களுடைய பங்காளிகளாக விளங்கிக்கொண்டிருக்கிற பகுத்தறிவுக்குச் சொந்தக்காரர்களாகச் சொல்லிக் கொண்டிருக்கிறவர்கள் ஒரு 'செக்யூலர் ஸ்டேட்'டிலே (Secular State) இருக்கிறவர்கள் எப்படி மதத்தலைவர்களை வணங்கலாம்- வாழ்த்தலாம் – பாராட்டலாம் என்று வழக்கு மன்றத்துக்குக் கூடப் போகிறசூழ்நிலையிலே-நான் இதைப்போன்ற ஒருசமயம் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சியிலேதான் அந்த இரகசியத்தையே வெளியிட்டேன். அதுவரை மீனாட்சிபுரத்திலே நடைபெற்ற அந்தச்சம்பவம் வெளிஉலகத்துக்கே தெரியாது. நான் இதைச் சொல்லுவதற்குக் காரணம், அந்த மதமாற்றம் சரியா தவறு என்பதற்குள்ளே நுழைய நான் விரும்பவில்லை. ஆனால் நம்முடைய சமயத்திலே, என்னுடைய தாய் தந்தையர் இந்து என்றுதான் அழைக்கப்பட்டார்கள். அதனால் என்னை நான் இந்து என்று சொல்லிக் கொள்வதிலே வெட்கப்படவில்லை யென்று சட்டமன்றத்திலேகூடக் கூறினேன். என்னைச் சைவர் என்று அழைக்கிறீர்களா! தாராளமாக அழையுங்கள். எனக்கு அதிலே வருத்தமுமில்லை. ஆனால் நான் எதற்கும்' கட்டுப் படுத்திக்கொள்ள இயலாதவனாக ஒரு பொறுப்பிலே இருக் கிறேன் என்பதனாலேயே நான் இந்தச் சமயத்தை – இந்த ஆன்மீகத்தை – இந்த மண்ணுக்கேயுரிய தத்துவங்களை அழிக்கிற – அடகுவைக்கிற காரியங்களுக்குத் தரகு வேலை பார்ப்பவனாக இருக்கமாட்டேன் என்பதையும் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

### உலகம்தழுவிய கருத்தரங்கு :

உரலுக்கு ஒருபக்கம் இடி; மத்தளத்துக்கு இரண்டு பக்கமும் இடி என்பதைப் போல என்னை இங்கே இருக்கிற குருமகா சந்நிதானங்களும் சந்தேகக்கண்களோடு பார்க்கிறார்கள்– அங்கேஇருக்கிற–நாங்கள் வளர்ந்துவந்திருக்கிற எங்களுடைய பங்காளிகளும் இவன் எல்லாம் ஆழ்வாராகிவிட்டான் என்றெல் லாம் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். ஆழ்வாராக ஆவதிலே ஒன்றும் மரியாதைகுறைவல்ல. எல்லோரும் ஆழ்வாராக ஆகி விடமுடியாது; நாயன்மார்களாக ஆகிவிடமுடியாது. முதலமைச் சராக இருந்த சேக்கிழார் பெருமான் முதலமைச்சராக இருந்த

மாணிக்கவாசகர் இப்படிப்பட்ட பெரியவர்களெல்லாம்-மிகப் பெரியமாவீரனை - படைத்தளபதியாக விளங்கிய பரஞ்சோதி — அவர்களெல்லாம் இந்த நாட்டிலே வரலாற்றினை உருவாக்கி விட்டுச் சென்றிருக்கிறார்கள். அந்தவரலாற்றை மாற்றமுடியாது. அது எத்தனை ஆண்டுக் காலமானாலும் எவ்வளவு புது வெள்ளம் வந்து அதை அழிக்கமுயன்றாலும் அது அழியாது. நாங்கள் களையெடுக்கிறோம் என்ற முயற்சியில் பயிரையே அழிக்கிற நிகழ்ச்சிகள் நடந்ததன்பயனை இந்தநாட்டின் தத்துவங்களெல்லாம் அழிக்கப்படுகிற சூழ்நிலை அமைந்தபோதும் இன்றைக்கு உலகம்தழுவிய ஒரு சைவசித்தாந்தக் கருத்தரங்கத்தை – இன்றைக்கு நம்முடைய மகாசந்நிதானத்தின் சார்பிலே – பாரதிதாசன் பல்கலைக்கழகத்தின் சார்பிலேஇங்கே நடத்தப்பெறுவது வரலாற்றிலே இடம்பெறுகிறஒன்று. எந்தப்பாவேந்தர்–புரட்சிக் கவிஞர் பெயராலே பல்கலைக்கழகம் இருக்கிறது? அதைநீங்கள் எண்ணிப்பார்க்க வேண்டும். அந்தப்பல்கலைக்கழகத்தின் தொடர்போடு இங்கே சைவ சித்தாந்தக் கருத்தரங்கு – உலகம் தழுவிய கருத்தரங்கு – நான் இதற்குமேலே சொல்ல விரும்பவில்லை.

## மக்கள்மத்தியில் மகா சந்நிதானங்கள் :

ஒன்றைமாத்திரம் மனம் திறந்து சொல்கிறேன். என்னையும் சந்தேகிக்காதீர்கள். எங்களையெல்லாம் நடத்திக் கொண்டிருக்கிற இந்நாட்டின் தமிழகத்தின் தளநாயகர் டாக்டர் மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்களையும் சந்தேகிக்காதீர்கள் அதுஒன்றுதான் சான்றோர்களுக்கு நாங்கள் வைக்கிற வேண்டுகோளாகும். நாங்கள் உங்களைச் சந்திக்க வரவில்லை என்பதனாலேயே உங்களுக்கு விரோதிகளாக இருக்கிறோமோ என்று எண்ணிக்கொள்ளாதீர்கள். ஏனென்றால் முதன்முதல் சந்திக்கிற வாய்ப்பை ஏற்படுத்தித் தந்தவர்கள் தவத்திரு. குன்றக்குடி அடிகளார் அவர்கள். காரணம் அது என் தாய்வீடு போன்றது, அந்தக்குன்றக்குடி. ஆகவே உங்களைப் பார்க்கவேண்டும் என்று விரும்புகிறோம். எப்பொழுது? என்பதுதான் நமக்குள்ள பிரச்சனை. நீங்கள் இந்த நாட்டு மக்களின் மத்தியிலே பவனி வரவேண்டும். ஏழை எளிய மக்களைச் சந்திக்கவேண்டும். சேரி வாழ்மக்கள் என்று புறக்கணிக்கப்படுகிறார்களே – ஒன்றும் தெரியாதவர்களாக, ஆதிதிராவிடமக்கள், அவர்கள் மத்தியிலே நீங்கள் பவனிவந்தாகவேண்டும். இன்று யார் யாரோ இதை வியாபாரத்திற்குப் பயன்படுத்திக் கொண்டிருக்கின்றார்கள். விஷமத்தனத்திற்குப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்கள்.

அழிவுக்குப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். அருள் கூர்ந்து உங்களை நான் மன்றாடிக் கேட்டுக்கொள்கிறேன் அவைகளுக்கு அனுமதி அளித்து விடாதீர்கள். நீங்கள் அனுமதி அளித்தால் - இடமளித்தால் அதற்குள் யார்நுழைந்து விடுவார்கள் என்பது நமக்குப் புரியாமல் போய்விடும். காவி அணிந்து கொண்டிருக்கிறவர்கள் எல்லாம் வணக்கத் திற்குரியவர்கள் என்று யார் சொன்னாலும் நாங்கள் ஏற்றுக் கொள்ளமாட்டோம். அவர்கள் பத்தரைமாற்றுத்தங்கங்களாக இருக்கிறார்களா? என்று நிறுத்துப் பார்க்கக்கூட எங்களுக்கு அவசியமில்லை. அவர்களுடைய பார்வையிலே, பழக்க வழக்கத் திலே, பண்பிலே தெரிந்துகொள்ள வேண்டுமென்று விரும்பு கிறோம்.

## அரசியல்வாதிகளிடம் விடாதீர்கள் :

இந்த நாட்டிலே சமயத்தை யார் அழித்தார்கள் - சமய உணர்வு ஏன் குறைந்தது? - சைவசித்தாந்தம்பற்றி இன்றைக்கு உலகம் தழுவிய ஆராய்ச்சி நடத்தப்படுகிறது - அப்படி நடத்தப்படுவதற்கு அடிப்படையாக ஆயிரமாயிரம் ஆண்டு களாக இருந்துவருவது எது? - அது நம்முடைய தாய்த் தமிழிலேயே தோன்றியிருக்கிறது - இந்தத் தமிழ் மொழியிலே தோன்றிய சான்றோர்களல்லவா எடுத்துச் சொல்லியிருக் கிறார்கள் - இதை 1982 ஆம் ஆண்டிலே 58 ஆவது வயதிலேதான் நானே தெரிந்துகொள்கிறேன். இதற்கு யார் காரணம் என்பதை உங்கள் முன்னாலேயே பணிவன்புடன்வைக்கிறேன். இந்தச் சைவ சித்தாந்தம் என்பது ஒரு அடிப்படை மூடநம்பிக் கையிலே கட்டப்பட்டதல்ல. இதை எடுத்து இங்கே நீங்கள் விளக்கிக்கொண்டிருக்கிறீர்கள் ஆனால் இந்த நாட்டிலே படிக்கத்தெரியாத பாமரன் - குப்பனும் சுப்பனும் இருக்கிறானே- 65 சதவிகிதம் பேர் படிக்கத்தெரியாதவன் - கைநாட்டுக்காரன் அவனுக்குச் சொல்வது யார்? அவனுக்குச் சொல்லவேண்டிய வேலையைக் கொடுத்தால் அவர்கள் இன்றைக்கு என்ன வேலை யைச் செய்துகொண்டிருக்கிறார்கள்? தயவுசெய்து நான் அதைத் தான் உங்கள் முன்பு பணிவன்போடு வைக்கிறேன். உங்களுக் குச் சில பழக்கவழக்கங்கள் இருக்கின்றன. நடைமுறைகள் இருக்கின்றன. நான் திருச்சியிலே மலைக்கோட்டையிலே விவாதித்தபோது சந்நிதானம் அவர்கள் அதைச்சொன்னார்கள். ஆனால் அதற்கு மாற்றுவழியைத் தயவுசெய்து நீங்கள் கண்டு பிடித்தாகவேண்டும். ஏனென்றால் காலமாற்றத்திற்கேற்ப நம் சமயமும் மாறுகிறது. தத்துவமும் மாறுகிறது. நான் அதைத்தான்

இங்குச் சொல்ல விரும்புகிறேன். எனக்கு இருக்கிற பிரச்சினை, இந்தக் கருத்துக்களை நாட்டு மக்கள் மத்தியிலே எடுத்துச் சொல்லக் கொஞ்சம் காலத்தை எடுத்துக்கொள்ளுங்கள். அதற் கென்று ஒதுக்குங்கள். மக்கள் மன்றத்துக்கு வாருங்கள். அதைத் தயவுசெய்து அரசியல்வாதிகளிடத்திலே விட்டு விடாதீர்கள். நான் அதைத்தான் தெளிவாகச்சொல்ல விரும்பு கிறேன். அரசியல்வாதி என்கிறபோது அரசாங்கம் தலையிட லாமா என்றும் சொல்கிறார்கள் இந்த அரசாங்கத்துக்குள் வர முடியாதவர்கள் அப்படிக் கேட்டுக்கொண்டிருக்கின்றார்கள். அதுவும் எங்களுக்குப் புரிகிறது. ஆக அரசாங்கத்துக்கு வர முயற்சிக்கிறவர்கள் அரசியல்வாதி என்ற பெயரிலே அப்படிக் கேட்கிறார்கள். அதுவும் எங்களுக்குப் புரிகின்றது. ஆனால் அரசாங்கம் தலையிடுகிறதா இல்லையா அது எங்களுக்குப் பிரச்சினையல்ல. தயவுசெய்து அரசாங்கத்தை – அரசியல்வாதி களுடைய ஆட்சியாகச் செயலாக மாற்றிவிடாதீர்கள். அதற்கு எங்களுக்கு உதவுங்கள். எங்களுக்கு என்கிறபோது இந்த நேரத்திலே என்னையே நான் தனியாகவே சொல்கிறேன்.

**சமயம் இல்லையானால் தமிழில்லை :**

நான் இந்த ஐந்தாறு ஆண்டுக் காலத்திலே பெற்ற அனுபவம் – கற்றுக்கொண்டிருக்கிற அனுபவம் – நம்முடைய முத்தமிழ்க்காவலர் போன்றவர்களுடைய உரைகளையெல்லாம் தத்துவங்களையெல்லாம் தெரிந்துகொண்டதற்குப்பிறகு இந்த நாட்டிலே ஆன்மீகமும் சமயமும் இல்லையானால் தமிழும் இல்லை. தமிழைப் பாரதிதாசன் காலத்திலிருந்து தொடங்கக்கூடாது. தொல்காப்பியர் காலத்திலிருந்து தமிழைத் தொடங்க நீங்கள் கற்றுகொண்டு இருக்கிறீர்கள். தமிழ் வாழ்க என்று 1938 லே இந்தி எதிர்ப்பிலே மாத்திரம் ஒரு முழக்கம் வந்தது என்று வரலாற்றை எழுதவேண்டாம். 1300 ஆண்டுகளுக்கு முன்னாலே தமிழ் ஞானசம்பந்தர் என்று தன்பெயரை வைத்துக்கொண்ட ஒருமிகப்பெரிய தலைவன் இந்தமண்ணிலே வாழ்ந்திருக்கிறான். அதை இந்த நாட்டிற்கு நாம் எடுத்துச் சொல்லவேண்டும். தமிழை எத்தனைபெயரிட்டு அழைக்கலாம் என்று சொன்ன வன அந்தப் புலவர் பெருமகன். அதை இந்த நாட்டிற்கு அறிமுகடபடுத்துவது யார்? நீங்கள் எங்களிடத்திலேவிட்டால் நாங்கள் எங்களுடைய இடத்திலே நிறுத்திக்கொள்வோம். அதற்குமேலே வரமாட்டோம். அது இயற்கை. இன்று சைவ சித்த ந்தத்தைப்பற்றி ஆய்வுக் கட்டுரைகள் வந்திருக்கின்ற அந்தத் தொகுப்பைக் கொஞ்சம் புரட்டிப்பார்த்தேன். எனக்கு இருக்கிறசந்தேகத்தைப் பெரியவர்கள் முன்னாலேவைக்கிறேன்.

இங்கே இருக்கிற அறிஞர்கள் முன்னாலே வைக்கிறேன். சைவ சித்தாந்தம் என்பது ஒரு சித்தாந்தமாக நாட்டுமக்களிடையே போய்ச்சேரவில்லையே! அதற்கு என்னகாரணம்? சில நேரத்திலே களையெடுக்கப்புறப்பட்டோம் நாங்கள். ஆனால் களையை எடுக்கிற அந்த வேகத்திலே அந்தப் பயிரையே அழிக்கிற வேலையிலேயும் ஈடுபட்டோம். அழிக்கப்பட்டபயிர்-என்றைக்கும் அழிக்கமுடியாதபயிர் என்பதை இன்றைக்கு இந்தச் சைவ சித்தாந்தக் கருத்தரங்கு காட்டிக்கொண்டிருக்கிறது. அதுதான் இதற்குள்ள பதில். இதற்குள்ள ஆற்றல். ஆயிரமாயிரம் ஆண்டுகளாக அழிக்கப் புறப்பட்ட படைகள் பல. சக்திகள் அனேகம். ஆனால் அவைகளையெல்லாம் இது தாங்கிநின்று கொண்டிருக்கிறது. உலகத்திலே தலைநிமிர்ந்துநிற்கும் தமிழ் மொழியை ஆன்மீகத்திலேயிருந்து பிரிக்கவேண்டும் என்ற எண்ணத்திற்கு நாம் எந்தக்காலத்திலேயாவது ஒரு முடிவைக் கட்டியாகவேண்டும். தமிழ் என்பது சமயத்தோடு இரண்டறக் கலந்துவிட்ட ஒன்று. தமிழை வளர்த்த சான்றோர்கள் யார் என்பதைத் தயவுசெய்து சாதாரண மக்களுக்கு ஒரு பட்டியல் போட்டுக் காண்பியுங்கள். அதைச் சொல்லுங்கள்.

## விஞ்ஞானமும் மெய்ஞ்ஞானமும்:

அப்படிச் சைவ சித்தாந்தத்தைப்பற்றிப் பேசுகிறபொழுது சித்தாந்தத்தினுடைய சிறப்புகள் என்ன? எது மற்ற சமயங்களோடு - மற்ற நெறிகளோடு சிறந்து விளங்குகிறது? மற்ற நெறிகளோடுமாறியிருக்கிறது. அல்லது கருத்து மாறுபாடு கொள்கிறது இதனை விளக்கிக்கூறுங்கள்.

இம்மதம் இயற்கையோடு இயைந்தமதம்- இயற்கையோடு இயைந்தவாழ்வுநெறி! இப்படிப்பட்ட உணர்வுகளையெல்லாம் நாம் இன்றைக்கும் சொல்லிக்கொண்டிருக்கிறோம். ஆனால் வளர்ந்து கொண்டிருக்கிற விஞ்ஞானத்தோடு இந்த சமயம்-இந்த சித்தாந்தம் ஒத்துப்போய் இருக்கிறதா? நம்முடைய முன்னோர்களுக்கு விஞ்ஞான அறிவு இருந்ததா? விஞ்ஞானப் பார்வை இருந்ததா? அறிவியல் நோக்குஇருந்ததா? இல்லையா? என்பதை அருள் கூர்ந்து, சான்றோர்கள், நம்முடைய இந்த சைவ சித்தாந்த நூல்களிலேயிருந்து எங்களுக்கு எடுத்துக் காட்டவேண்டும். நீங்கள் தெரிவிக்கின்ற-தருகின்ற-கோடிட்டுக்காட்டுகின்ற செய்திகளிலேயிருந்து மிகச்சிறந்த விஞ்ஞான அறிவு படைத்தவர்களாக நம்முடைய முன்னோர்கள் இருந்திருக்கிறார்கள் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

இன்றைக்கு விண்வெளியைச் சுற்றுகிருர் ராகேஷ்சர்மா. அந்த விண்வெளியைச் சுற்றுகின்ற கருத்தோடு நம்முடைய சைவசித்தாந்தக் கருத்து ஒத்து வருகிறதா? இல்லையா? அதற்கு அடிப்படை நம்முடைய சைவ சித்தாந்தத்திலே உள்ளதா? இல்லையா? இன்றைக்கு நம்முடைய பி. டி. ராஜன் அவர்களுடைய குமாரர் அவர்கள் இங்குப் பேசும் போது கூடச் சில கருத்துக்களைச் சொன்னுர்கள்.

## ஞாலம் உருண்டையானது :

ஐந்து அடிப்படைப் பொருள்கள் – பஞ்சபூதங்கள் என்று நம்முடைய சமயங்களிலே கூறுகிறோம். அதை அவர்கள் சுட்டிக்காட்டிவிட்டு அதற்குப்பிறகு அந்தபஞ்ச இந்திரியங்களைப் பற்றியும் குறிப்பிட்டுச் சொன்னுர்கள். அந்த இரண்டையும் இணைத்தார்களோஎன்றுகூட எனக்குச்சந்தேகம் பஞ்சபூதங்கள் பேசிக்எலிமெண்ட்ஸ் (Basic Elements)என்று இன்றைக்கு விஞ்ஞானி உலகத்துக்கு கற்றுத்தந்திருத்கிருனே. இதை நம்முடைய முன்னேர்கள்மூவாயிரம்ஆண்டுகட்கு முன்னல்தொல்காப்பியத்திலே சொல்லியிருக்கிருர்களா? இல்லையா? அப்படிச் சொல்லியிருப்பதாகப் பாடல்கள் காட்டியிருக்கிறீர்களே, அந்த பாடல் இந்த உலகத்திற்கு விளங்குமாறு பள்ளிக்கூடப் பாடத்திலே வந்ததா? பாடத்திலேசேர்ந்ததா? இன்றைக்குப்பூமிஉருண்டை என்று கலிலியோ கூறியதாக இங்கு இருக்கிற ஔவை நடராசன் போன்றவர்கள் எல்லாம் சொல்லியிருக்கிருர்களே! இந்தப்பூமியை உருண்டை என்று நம்முடைய முன்னேர்கள் பாடினுர்களா? இல்லையா?'ஞாலம்'என்பதன்பொருளேதொங்கிக் கொண்டிருப்பது என்பதைக் குறிக்கும் என்று ஒரு இருபத்தி ஐந்து ஆண்டுகளுக்கு முன்னலே சிதம்பரத்திலே ஒரு தமிழ் மாநாடு நடைபெற்ற போது நம்முடைய தமிழ்ப்பெரும்புலவர் வெள்ளைவாரணனுர் அவர்கள் பேசினுர். நான் இருபத்திஐந்து முப்பது ஆண்டுகளுக்கு முன்னலே சொல்கிறேன். அப்படியானுல் ‘ ஞாலம் ’ என்று சொன்னுல் தொங்குவது என்று பொருள் படுகிறது. அப்படியானுல் நம்முன்னேர்கள் தொங்குவது இது கோளம் ! அண்ட வெளியில் இருக்கிறது ! என்று சொல்லியிருக்கிருர்களென்ருல்விஞ்ஞான ஆராய்ச்சி–அறிவியலாராய்ச்சி இல்லாமல் சொல்லியிருக்கிருர்களா? இல்லை அடிப்படைக் கருத்தே இல்லாமல் பாடியிருக்கிருர்களா? அப்படிப் புரிந்து பாடியிருக்கிருர்களென்ருல் நம்முடைய முன்னேர்கள் 3000 ஆண்டுகளுக்கு முன்னலே அறிந்துகொண்ட செய்தியை ஏன்

நாம் எடுத்துச்சொல்லவில்லே? இன்றைக்கும் பள்ளிக்கூடப் பாடங்களிலே இந்தபூமிஉருண்டை என்பதற்குக் கலிலியோ கண்டுபிடித்தஅந்ததத்துவத்தைப்போட்டு, ஒருஉருண்டையை காட்டி, ஒரு கப்பல் போய்க்கொண்டேயிருக்கிறது ஒரு படம் 2 வது படம் என்று நான் படித்த காலத்தில் இருந்தது (இப்போது என்ன இருக்கிறது என்றே தெறியாது. அதையேதான் போட்டிருப்பார்கள் என்று கருதுகிறேன்.) என்று விளக்கம் சொல்லுவதை ஏன் அனுமதித்துக் கொண்டிருக்கிறோம்?

## பஞ்சபூதத்தலங்கள் :

காஞ்சி புரத்திற்குப் போகிறேன். இது மண்ணுக்குரியதலம். ஏகாம்பரநாதர் ஆலயம். அங்கே கருவறையிலே இருக்கிற லிங்கம் மண்ணாலேயே செய்யப்பட்டது. அங்கே இருக்கிற தல விருக்ஷம் எத்தனையாயிரம் ஆண்டுகளாயிற்று? நானும் நம்முடைய வனத்துறை மற்றும் ஆராய்ச்சியாளரிடத்து கேட்டுக் கொண்டிருக்கிறேன்? இதை ஆராய்ந்துசொல்லுங்கள். எத்தனையாயிரம் ஆண்டுகளாயிற்று? இந்தமரத்துக்கு வயது என்ன என்றுசொல்லுங்கள் என்றுகேட்டிருக்கிறேன். பதில் இன்னும்கிடைக்கவில்லை கி. ஆ. பெ ஐயா இருக்கிற ஊருக்குப்பக்கத்திலேயே திருவானைக்காவல். அங்கேநீரிலேயேஇருக்கிறது ஆலயம். அந்தக்கருவறை நீருக்குள்ளேயே இருக்கிறது. அது நீருக்கான ஆலயம். காஞ்சிபுரம் நிலத்துக்கான ஆலயம். திருவண்ணமலை நெருப்புக்கான ஆலயம். தவத்திரு அடிகளார் அவர்களுடைய ஆதீனத் தலைமையிடம். தமிழகத்திலே நெருப்புக்குரிய விழாவாக ஒளி விழா அங்கேதான் நடக்கிறது. கார்த்திகை விழா. அதற்குப் பிறகு, காற்றுக்கு ஒருதலம். நான் இன்னும் அங்குப் போகவில்லை. அது ஆந்திராவின் எல்லையில் இருக்கிறது. அது நம்முடைய காளத்தி, அதற்குப்பிறகு, நம்முடைய ஆற்றலை – அறிவை அனைத்தையும் சேர்த்து அமைத்திருக்கிற ஆலயம் சிதம்பரம்வெளிக்காக அதை இன்றைக்கும்'சிதம்பரரகசியம்'என்று சொல்கிறார்கள். கருவறையிலே ஒன்றுமில்லை. அதுவெளி. இந்த வெளியை – விஞ்ஞானத்தை அப்படியே படைத்திருக்கிறார்கள் நடராஜராக. உலகத்திலே இருக்கிற அறிஞரெல்லாம் பார்த்து வியக்கிறார்கள். நடராஜருடைய உருவத்தைப்பார்த்து ஆனால் நம்முடைய நாட்டுமக்களுக்கு அந்த அற்புதம் தெரியவில்லை. இதைக் கொண்டுபோய் எத்தனை லட்சம் டாலருக்கு விற்கலாம் என்று தானே இவன் தெரிந்து வைத்திருக்கிறான். 10 லட்சம் அமெரிக்கடாலர் கிடைக்கிறதே என்று திருடிக்கொண்டு போகிறானேதவிர அதனுடைய அற்புதத்தை – அறிவியல் – விஞ்

ஞானத்தை அறிந்துகொள்ளத் தெரியவில்லை. இவை எத்தனை யாயிரம் ஆண்டுகளுக்கு முன்னாலே தோற்றுவிக்கப்பட்ட சைவ ஆலயங்கள்.

## பஞ்சபூதத்தலங்களின் பழமை :

சைவ சித்தாந்தத்தைப் பற்றிக் கருத்தரங்குகள் நடத்திக் கொண்டிருக்கிறோமே! இதற்குளங்களுக்குவிளக்கம்தாருங்கள். இந்த நாட்டு மக்களுக்கு நாங்கள் எடுத்துச் சொல்வதற்கு எங்களுக்கு விளக்கம்தாருங்கள். சரி! இதையும்நான் ஆராய்ச்சி யாளரிடத்திலே கேட்டேன். எதற்காக காஞ்சியை மண்ணுக்கென்று எடுத்தார்கள். எதற்குத் திருவண்ணாமலையை நெருப்புக்கென்று எடுத்தார்கள். அதிலேயும் மிகச் சிறந்த ஆராய்ச்சியிருக்கிறது. இன்றைக்குச் சமீபத்திலே ஒரு செய்தி யைப் படித்திருப்பீர்கள். 15 நாட்களுக்குள்ளே வந்தது. உலக ஐக்கிய நாடுகள் ஸ்தாபனம் இந்தியாவிலே மிகத்தொன்மை வாய்ந்த நகரமாகக் காஞ்சியைத் தேர்ந்தெடுத்து அதை ஆய்வு செய்வதற்காக நிதி ஒதுக்கீடு செய்திருக்கிறார்கள். அதற்காகத் தான் நம்முடைய முன்னோர்கள் மண்ணுக்கொரு ஆலயமாக நிலத்திற்கொரு ஆலயமாக காஞ்சிபுரத்தை அந்த ஏகாபர நாதர் ஆலயத்தைத்தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். சரி, திருவண்ணா மலை! அதையும் கேட்டேன் ஆராய்ச்சியாளர்களிடத்திலே! நம் முடைய நாட்டிலே இருக்கிற மலைகளிலே வயது முதிர்ந்தமலை கோடிக்கணக்கான ஆண்டுகள் தொன்மையான மலை திரு வண்ணாமலை. அது மாத்திரமல்ல. நெருப்புச் சக்தி அதிகமாக இருக்கிற குன்று திருவண்ணாமலைக் குன்று. அதனால் தான் திருவண்ணாமலையைச் சுற்றி ஆசிரமங்களெல்லாம் அமைக்கப் பட்டிருக்கின்றன. மருத்துவங்களை யெல்லாம் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அந்த திருவண்ணாமலையைச் சுற்றிப் பிராகாரம் வருவதற்குப்பாதைகள் அமைக்கப்பட்டிருப்பதாகச் சொல்கிறார்கள். அதனாலேதான் அங்கே ஒளி தருகின்ற ஒளிக்கு விழா எடுக்கிறார்கள். அந்தக்குன்றேநெருப்புத்தன்மைவாய்ந்த குன்று என்று ஆராய்ச்சியாளர்கள் சொல்கிறார்கள். திருவானைக் காவல் – எந்தக்காலத்திலேயும் நீர் சுரந்துகொண்டிருக்கும். அங்கே நான் இன்னும் போகவில்லை. அங்கே போய்வந்த பெருமக்கள் பலர் சொல்லுகிறார்கள். காளஹஸ்தி – அங்குக் கர்ப்பக்கிரகத்தில் ஏற்றி வைத்த விளக்கு ஆடிக்கொண்டே யிருக்கிறது என்று சொல்கிறார்கள். அது எப்படி காற்று அங்கே உள்ளே வருகிறது? செல்கிறது அதை எப்படி அமைத்திருக் கிறார்கள் என்று தெரியவில்லை. சிதம்பரம் தான் வெளி. ஆகவே

இந்த பஞ்சபூதங்கள்தான் ' Basic Elements ' உலகத்தை ஆட்டிப்படைத்துக் கொண்டிருக்கின்றன என்ற தத்துவத்தை நீங்கள் தொல்காப்பியத்திலேயிருந்து சொல்லிக் கொண்டு வருகிறீர்கள். தொல்காப்பியத்திலே நிலம், நீர், தீ, வளி ஆகாயம் ஆகியவற்றைக் கூறுகிற நூற்பாவை வைத்திருக்கிறீர்கள்.

## நமது தத்துவம் அறிவுபூர்வமானது :

ஆகவே நம்முடைய சித்தாந்தம் என்பது வெறும் தத்துவமல்ல. வெறும் நம்பிக்கையின் அடிப்படையில் எழுப்பப்பட்டதல்ல. வெறும் ஆன்மீகத்துக்கு அல்ல. அது ஒரு வாழ்வுநெறி — அறிவின் அடிப்படையிலே எழுந்த தத்துவம். விஞ்ஞான அடிப்படையிலே எழுந்ததத்துவம். பாரதியார் எண்பது ஆண்டுகளுக்குமுன்பு பாடினரே " சந்திரமண்டிலத்தியல் கண்டுதெளிவோம் ". சந்திரனுக்கு என்றைக்குப் போனன் மனிதன் — வானவெளியைச் சுற்றமுடியும் என்கிற உணர்வு இல்லையானல் எப்படிப் பாடியிருக்க முடியும். அவருக்கு அந்த உணர்வை எழுப்பிய தத்துவங்கள் இங்கே பொதிந்து கிடக்கின்றன. நம்முடைய அறிஞன் ஒருவன் சொன்னன். விஞ்ஞானம் எங்கே தோற்கிறதோ அங்கே மெய்ஞானம் பிறக்கிறது. விஞ்ஞானிக்கு எங்கே சந்தேகம் பிறக்கிறதோ அங்கே மெய்ஞ் ஞானி தோன்றுகிருன்.

## ஆய்வு வேண்டும் :

வாழ்வாவது மாயம் மண்ணவதுதிண்ணம்என்றுயார்யாரோ எடுத்துச் சால்லிவிட்டுப்போனர்கள். இதை அவ்வைநடராசன் அவர்கள் எடுத்துச்சொன்னர். ஆனல் திருஞானசம்பந்தர் இந்த மண்ணிலேயும் சிறப்பாக வாழலாம் என்றுபாடுகிருர். பெண்ணைப் பற்றி நிலையாமை, வாழ்க்கை நிலையாமைபற்றிப் பேசினர்கள். ஆனல் இறைவனே பெண்ணேடு வாழ்வைக்கொண்டிருக்கிருன் என்றும் பாடுகிருர். இந்த தத்துவங்களையெல்லாம் எடுத்துச்சொல்லுகிற வாழ்க்கைக்கு ஏற்ற நடைமுறை இந்த சைவ சித்தாந்தம். இது அறிவியலின் அடிப்படையிலே விஞ்ஞானத்தின் அடிப்படையிலே வகுக்கப்பட்டிருக்கிறது. உலகத்திலே மனிதன் தோன்ருத காலத்திலே நாம் இந்த விஞ்ஞானக் கருத்துக்களைச்சொல்லியிருக்கிருேம். தயவுசெய்து இந்த அடிப்படையில் நம்முடைய ஆராய்ச்சியாளர்கள் — நம்முடைய அறிஞர்கள் சிந்தித்து எங்களுக்குத் தரவேண்டும். நான் வேறெதையும் விரும்பவில்லை.

### சென்னையில் நடக்கவேண்டும் :

ஏதாவது ஒரு பொதுப் பெயருக்குள்ளே இந்த நாட்டு மக்களைச் சேர்த்தாகவேண்டும். இல்லையென்றால் பேதங்கள் பிழைகள் அதிகரித்துக்கொண்டே வருகின்றன. அங்கேயிருந்து பார்க்கிறபோது பெறுகிற அனுபவத்தை வைத்துச்சொல்கிறேன். அருள்கூர்ந்து நீங்கள் அதற்கும் ஒருவழி கண்டுபிடித்துத் தாருங்கள். அதற்கு ஒரு பொதுப்பெயர் இருப்பதை நாம் ஏற்றுக்கொள்கிறோமா இல்லையா என்பதைச் சொல்லுங்கள். அதற்கும் நீங்கள் எல்லாம் தயவுசெய்து மக்கள் மன்றத்துக்கு வாருங்கள். நான், இந்த நிகழ்ச்சி, மகாசந்நிதானம் சார்பில்—சென்னையிலே நடத்திக்கொண்டிருக்கிற அந்த நிலையத்தின் சார்பிலே இது நடைபெற்றிருக்குமேயானால் இன்னும் உலகம் தழுவிய அளவிலேசிறப்பாகநடைபெற்றிருக்கக்கூடும். ஆனால் இது இந்த இடத்திலே நடப்பதற்கு ஒரு சிறப்பு இருக்கிறது. காரணம் இது உலகம் தழுவிய கருத்தரங்கு. இக்கருத்தரங்கு அறிஞர்கள் மாத்திரமே கலந்துகொள்வது. நீங்கள் மக்கள் கலந்துகொள்கிற மக்கள் மன்றத்திலேயும் வந்தாகவேண்டும். அதற்கு நீங்கள் துணைநிற்கவேண்டும். நான் உங்களுக்கு மீண்டும் சொல்கிறேன். உங்களிடத்திலே எந்தவிதமான மரியாதைக் குறைவோ, உங்களையெல்லாம் மதிக்கவேண்டாம் என்ற எண்ணமோ, நீங்கள் வணங்கத்தகாதவர்கள் என்ற கருத்தோ எங்களுக்கு – குறிப்பாக எனக்குக் கிஞ்சித்தேனும் இல்லை யென்பதைத் தயவு செய்து நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும்.

### பெரியோரை மதிப்போம் :

வாழ்க்கையிலே பெரியவர்களைச்சந்திக்கிறபோது பாராட்டு கிறவன் தான் மனிதன். பெரியவர்களைச் சந்திக்கிறபோது வணங்குகிற உள்ளம் படைத்தவன் தான் மனிதன். ஆகவே மற்றவர்களை வணங்குவதே நம்மை எதிர்ப்பதாக இருக்கிறது என்று யாரும் கருதிக்கொள்ளவேண்டாம். நம்மாலே வணங்கப் படுகிறவர்கள் யாராக இருந்தாலும் அவர்கள் பெரியவர் கள் – பெரியவர்களாக விளங்க வேண்டும் என்பதுதான் எங்களுடைய தத்துவம்.

### நம்பிக்கை வேண்டும் :

எங்களுடைய கவலையெல்லாம் இந்தச் சமுதாயத்தை யார் யாரோ எங்கெங்கோ இழுத்துக்கொண்டுச் செல்கிறார்களே

என்பதுதான். மீனாட்சிபுரத்தைப் பார்த்தபிறகு அடுத்தவாரமே நான் அங்குச்சென்றேன். அதனாலே என்மீதுகூட நம்முடைய அருமைச் சகோதரர்களுக்குக் கோபம்கூட வந்தது. நான் அவர்களுக்கு விரோதி என்றுகூட பேசுகிறார்கள். நான் விரோதி அல்ல; எல்லாருமே நண்பர்கள்தான். எங்களுடைய சமயம் எங்களுக்கு அப்படித்தான் கற்றுத்தந்திருக்கிறது. யாதும்ஊரே யாவருங்கேளிர் என்றுசொன்ன சமயம்தானே இது.ஒன்றேகுலம் ஒருவனேதேவன் என்று உலகத்திற்குச் சமய ஒற்றுமையை வழங்கிய சமயத்தைச்சார்ந்தவர்கள் நாம். இன்றைக்குவளர்ந்து கொண்டு வருகின்ற விஞ்ஞானத்துக்கு அறிவியலுக்கு விரோதிகளல்ல நாம். எதிரிகளல்ல. இவ்விஞ்ஞானத்தை அறிவியலை எங்களுடைய முன்னோர்களே தெரிந்துகொண்டிருந்தார்கள். அதை எடுத்துச்சொல்லத் தவறிவிட்டோம். அதனாலே எங்களை மூடநம்பிக்கையிலே உழலுகின்றவர்கள் என்று குற்றம் சாட்டினீர்கள். நாங்கள் மூடநம்பிக்கையிலே உழன்றுகொண்டிருக்கவில்லை. நாங்கள் நம்பிக்கை வைக்கிறோம். நம்பிக்கையில்லையானால் உலகமே இல்லை. வீட்டைப்பூட்டிவிட்டு வெளியில் செல்லுகிறான். நாலுதடவை இழுத்துப்பார்த்துவிட்டுப் போகின்றான். சென்றவன் திரும்பி வரும்வரை அந்தப்பூட்டுத் திறக்காது என்ற நம்பிக்கையில்தான செல்லுகின்றான். அந்த நம்பிக்கை இல்லையானால் அங்கேயே செத்துப்போய்விடுவான்.

## உலகுதழுவிய முதல் கருத்தரங்கம்:

நம்பிக்கை யில்லையேல் வாழ்வு இல்லை. அந்தநம்பிக்கை மூடநம்பிக்கையாய் இருத்தல் கூடாது. மூடநம்பிக்கை என்று, நம்பிக்கைகளையே சிதறஅடித்து விடாதீர்கள்! அந்தநம்பிக்கையின் அடிப்படையிலே தான் இன்றைக்குச் சமுதாயத்தை வளர்த்துக் கொண்டிருக்கின்றோம். அந்த நம்பிக்கையினுடைய அறிகுறிதான் இங்கே நம்முடைய குருமகாசந்நிதானம் அவர்களுடைய காலத்தில் – 40 ஆண்டுகளுக்கு முன்னாலே இதைப் போல ஒருவிழா நடந்ததாக அவர்கள் சொன்னார்கள் – ஆனால் உலகம் தழுவிய ஒருகருத்தரங்கு சைவ சித்தாந்தத்திற்கு நடைபெறுவது இதுதான்முதன்முறை என்கிற காரணத்தினாலே நான் இந்த நாட்டு மக்களின் சார்பிலே அவர்களை வணங்குவதற்குக் கடமைப்பட்டிருக்கின்றேன். நம்முடைய டாக்டர் ஔவை நடராசன் சொன்னார். சென்னைப் பல்கலைக்கழகத்தினுடைய 125 ஆவது ஆண்டுவிழாவிலே சைவசித்தாந்தத்திற்கு ஆய்வு மையம்தொடங்கினோம் என்று. நானும் அந்தக்குழுவிலேதுணைத் தலைவர். மாண்புமிகு கோகுலகிருஷ்ணன் அவர்கள் தலைவர்.

நம்முடைய வாழ்நாளிலே ஒருபல்கலைக் கழகம் சைவசித்தாந் தத்தை ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்ளக் கூடிய சித்தாந்தம் என்று ஏற்றுக்கொண்டிருக்கிறதே! அதுவேமிகப்பெரிய சிறப்பு. 20லட்சம்ரூபாயைத்திரட்டிக்கொடுத்தோம். அதற்குநம்முடைய சந்நிதானம் 1 லட்சம் ரூபாயை வழங்கி, அவர்களுடைய பிரதி நிதியை அங்கே சென்னைக்கே அனுப்பி, அவர்களுடைய கருத்துக்களை அந்தக் குழுவிலே எடுத்துச் சொன்னதை நான் நினைந்து நினைந்து பாராட்டுகின்றேன். தமிழ்நாட்டிலே சைவ சித்தாந்தத்திற்குப் பல்கலைக்கழகத்திலே மையம் தொடங்குகிற போது, 1 லட்சம்ரூபாயைஇவர்கள் வழங்கினர்கள். வேறு எந்த எந்த ஆதீனங்கள் வழங்கினர்கள் என்பதற்கு இப்பொழுது என்னிடத்திலே தகவல் இல்லை. அப்படி வழங்கியிருந்தால் அனைவருக்குமே இந்தநேரத்தில் நான் நன்றி தெரிவிக்கக் கடமைப் பட்டிருக்கின்றேன். அப்படி வழங்கவில்லையானல் வழங்கவேண்டும் என்றஉள்ளத்தை ஆண்டவன் அவர்களுக்கு உண்டாக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கின்றேன்.

## தகுதியான இடம் :

தமிழின் பெயராலே கேட்கின்றேன். எங்களை எந்த உணர் வாலும் நீங்கள் சந்தேகப்பட வேண்டாம். நாங்கள் எல்லா வற்றிற்கும் துணையாக நிற்கின்றோம். எங்களுக்கு இருக்கிற ஒரே வேண்டுகோள்–நீங்கள் எப்படியாவது–எந்தசட்டதிட்டங்களை மாற்றுவீர்களோ – அல்லது எந்த பழக்க வழக்கங்களை மாற்று வீர்களோ – எங்களுக்கு நாடு முழுக்க நீங்களெல்லாம் வர வேண்டும். அங்கே நாங்கள், உங்களை, இந்த நாட்டின் மக்கள் மத்தியிலே சந்திக்கவேண்டும். அந்த மக்கள் உங்களைப் பார்த்து வணங்குதை – பாராட்டுவதை நாங்கள் கண்டு மகிழ வேண்டும். அப்பொழுதுதான் இந்த சைவ சித்தாந்தம் – அது எந்தச் சித்தாந்தமானலும் எந்தச் சமய மானலும் இந்தநாட்டுமக்களிடத்திலே யாராலும் அகற்றப் படாமல் – புறக்கணிக்கப்படாமல் அது பகுத்தறிவின் அடிப் படையிலே விஞ்ஞானத்தின் அடிப்படையிலே வளர்வதற்குத் துணை நிற்கும் என்று நான் இந்த நேரத்திலே வணங்கிக் கேட்டுக் கொண்டு – நான் முதன்முறை வந்தேன் என்று வணக்கத்திற்குரிய அடிகளார் அவர்கள் சொன்னர்கள். எனினும் – ஆயிரம் முறை வருவதற்கும் நான் தயங்கவே மாட்டேன். ஆனல் வருவதற்குரிய சந்தர்ப்பங்களை நீங்கள் எங்களுக்கு ஏற்படுத்தித்தந்தால் இருகரம்கூப்பிவணங்குவேன் என்று மாத்திரம்சொல்லி–நான் சந்நிதானம்அவர்கள்இடத்திலே

மிகுந்த ஈடுபாடு கொண்டவன் – அவர்களைத் தொடர்ந்து கவனித்துக் கொண்டு வருபவன் – சென்னையிலே அவர்கள் இருக்கிற பொழுது எவ்வளவு சிறந்த இலக்கியப் பணியை– தமிழ்ப்பணியைச் செய்தார்கள் – இதே மாயூரத்திலே ஒரு மூன்று ஆண்டுகளுக்கு முன்பு வந்தபொழுது அந்தப்பெரியவர் களிடத்திலே இதைத்தான் தெரிவித்தேன். அவர்கள் எவ்வளவு தமிழ்ப் பணியாற்றினர்கள். அது இப்பொழுது குறைந்து விட்டதே! அதுதான் எனக்கு இருக்கும் கவலை என்றேன். அதற்கெல்லாம் வட்டியும் முதலுமாகச்சேர்த்துத்தான் அவர்கள் இவ்வளவு பெரிய – மிகச்சிறந்த – வரலாற்றிலே இடம் பெறத் தக்க நிகழ்ச்சி – உலகச் சைவ சித்தாந்தக் கருத்தரங்கம் – அதை இந்த ஆதீனம் தான் நடத்துவதற்குத் தகுதியுள்ள ஆதீனம் – அவர்கள்தான் தகுதியுள்ளவர்கள்–இந்தமண்தான்– இந்த வளாகம்தான் அதற்கு ஏற்றஇடம் என்பதை உலகத்தின் முன்னலே நிருபித்துக் கொண்டிருக்கிற அவர்களை வணங்கி விடைபெற்று அமைகின்றேன்.

வணக்கம்.

---

**கடிதம் :**

பேராசிரியர்
**L, ஞானகிராமன் M. A,**
துணை முதல்வர்

10. கீழத்தெரு
ஆழ்வார்குறிச்சி
27—9—84

தவத்திரு தருமபுரம் ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் பாதாரவிந்தங்களில் அநேக நமஸ்காரங்களுடன் சமர்ப்பிப்பது.

தங்கள் ஆதீனம் வெளியிடும் "ஞானசம்பந்தம்" திங்கள் இதழ் கண்டேன். மெய்ஞானத்தைமட்டுமின்றி, விஞ்ஞானம், மருத்துவம், பக்தி, இலக்கியம் இவைபற்றியெல்லாம் கட்டுரை கள் அமையப்பெற்று, ஒரு முழுமையான திங்கள் இதழாகத் திகழ்கின்றது,

இந்த "ஞானசம்பந்தம்" ஒவ்வொரு கல்லூரியிலும், ஒவ் வொரு பொதுநூலகத்திலும் கிடைக்கும்படிச் செய்யவேண்டும். இதற்கு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் திருவருள் செய்யவேண்டு மெனப் பிரார்த்திக்கிறேன்.

L, ஞானகிராமன்,

தருமையாதீனம்

# ஸ்ரீ கயிலைக் குருமணி நினைவுச் சிறுகதைப்போட்டி

திருக்கயிலாயபரம்பரைத் தருமையாதீனம் 25 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரியசுவாமிகள் அவர்களின் நினைவாக இந்தச் சிறுகதைப்போட்டி அமைக்கப்பட்டுள்ளது.

பல அன்பர்கள் வேண்டுகோளுக்கு இணங்கிக் காலம் நீட்டிக்கப்பட்டுள்ளது. சிறுகதை அனுப்பப்பட வேண்டிய கடைசிநாள் 15-12-84.

| | | | |
|---|---|---|---|
| முதல் பரிசு ரொக்கம் | ... | ரூ. | 1001—00 |
| இரண்டாவது பரிசு | ... | ரூ. | 501—00 |
| மூன்றாவது பரிசு | .... | ரூ. | 251—00 |

ஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் இனிய குரலில் எளிய நடையில் சமய தத்துவங்கள் தோத்திர சாத்திரங்கள் வேதாகம புராணங்கள் – இவற்றைப்பற்றித் தெளிவாக மக்கட்கிடையே அறிவித்து வளர்த்தவர்கள். பல கல்விநிலையங்களை நிறுவி வளர்த்தவர்கள். திருக்கோயில்களை அருட் பொலிவோடு வளர்த்தவர்கள். கயிலை முதல் கன்னியாகுமரிவரை பலமுறை யாத்திரை செய்தவர்கள். ஆதீன வரலாற்றில் பொற்காலம் கண்டவர்கள்.

போட்டிக்கான சிறுகதைகள் அனுப்பப்பட வேண்டிய கடைசி நாள் 15—12—84. தாமதமாக வந்துசேரும் கதை எதுவும் போட்டியில் சேர்க்கப்பட மாட்டாது என்று எழுத்தாளர்களுக்கு அறிவிக்கப்படுகிறது.

போட்டிக்கு அனுப்பப்படும் சிறுகதைகள் **ஸ்ரீ கயிலைக் குருமணி நினைவுச் சிறுகதைப் போட்டி** என்று உறையில் குறிப்பிட்டு, ஆசிரியர், ஞானசம்பந்தம், தருமை ஆதீனத் திங்கள் இதழ், ஞானசம்பந்தம் செயலகம், தருமபுர ஆதீனம், மயிலாடுதுறை 609 001 தஞ்சை மாவட்டம் என்ற முகவரிக்கு அனுப்பப் பெறல் வேண்டும்.

**ஸ்ரீ கயிலைக் குருமணி நினைவுச் சிறுகதைப் போட்டியில் தமிழ் எழுத்தாளர்கள் எவ்வித பேதமுமின்றி, ஆண் பெண் இருபாலரும் கலந்து கொள்ளலாம்.**

**ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் ஆணையின்வண்ணம்**

**ஆசிரியர், ஞானசம்பந்தம் – தருமையாதீனத் திங்கள் இதழ்,**
**ஞானசம்பந்தம் அலுவலகம், தருமபுரம்,**
**மயிலாடுதுறை 609 001, தஞ்சை மாவட்டம்.**

கட்டுரை எண். 54

# அபிராமி அந்தாதி

டாக்டர் புலவர் திரு. K. சந்தானராமன், M A., B. Lit., D. P. P. A,. D. U. N., I. U.
பருத்தியூர்

சின்னஞ் சிறிய மருங்கினிற் சாத்திய செய்யபட்டும்,
பென்னம் பெரிய முலையும், முத்தாரமும், பிச்சிமொய்த்த
கன்னங் கரிய குழலும், கண்மூன்றும் கருத்தில்வைத்துத்
தன்னந் தனியிருப் பார்க்கிது போலும் தவமில்லையே. 53

அ. சின்னஞ்சிறிய மருங்கினிற் சாத்திய செய்யபட்டு

(1) மிகச்சிறியநுண்ணிடையில் சாத்திய சிவந்தபட்டாடை முதலில் குறிப்பிடப்படுகிறது. மருங்கு – இடை. செய்ய–சிவந்த.

(2) பெண்களின் இடை மிக நுண்ணியதாக இருத்தல் வேண்டும் என்ற இலக்கணத்திற் கேற்ப அம்பிகையின் இடையும் சிறியதாக இருப்பதால் சின்னஞ்சிறிய மருங்கு என்றார். "கொடிக் கொண்ட சிற்றிடை" என மதுராபுரி அம்பிகை மாலையும் குறிப்பிடுகிறது.

(3) அவள் அழகு வெள்ளமாக இருக்கிறாள். மேனியின் இருபக்கங்களும் அவ்வழகு வெள்ளத்தின் பெருக்கை–ஆற்றுப் பெருக்கு போன்ற அப்பெருக்கை, கட்டிக்காக்கும் கரைகள் போல் விளங்குகின்றன. ஆற்றின் கரை சில இடங்களில் 'உடைந்துவிடுமோ' என்ற நிலையில்இருக்குமல்லவா? அவ்வாறு அவளது இடைப்பகுதி மட்டும் அவ்வழகு வெள்ளத்தால் உடைந்துவிடுமோ என்று அஞ்சத்தோன்றும் வகையில் அமைந்திருக்கிறது! அவளது சிற்றிடையின் மெலிவினை சௌந்தரிய லகரி இப்படி வருணிக்கிறது.

(4) சிவந்த பட்டாடையினை அம்பிகை விரும்பி அணிகிறாள். அர்ச்சாமூர்த்தங்களுக்கும் சிவந்த பட்டாடையினை அணிவித்தல் சிறப்பாகக் கருதப்படுகிறது. 'அருண துகூலம்

என்னும் சிவந்த ஆடையினைச் சாற்றுதல் அறுபத்துநான்கு உபசாரங்களில் ஒன்ருகும்.

(5) "அருணருண கௌஸும்ப வஸ்த்ர பாஸ்வத் கடிதடி" அதாவது மிகச்சிவந்த குசும்பச் செடியின் சாயமேற்றிய பட்டாடையினுல் அழகுற்றுவிளங்கும் இடைப்பகுதியினையுடையவள் என்று சகஸ்ரநாமம் குறிப்பிடுகிறது. பழங்காலத்தில் குசும்பச் செடி என்னும் தாவரத்தினின்று தயாரித்த சிவந்த சாயத்தினைப் பட்டாடைகளுக்கு ஏற்றிவந்தனர். அவ்வாறு குசும்பச்சாற்றினுல் சாயமேற்றிய ஆடை 'கௌஸும்ப வஸ்த்ரம்' என்று அழைக்கப்பட்டது. புதிய கோடி வேட்டியினை 'காரிக்கன் வேட்டி' என்றும் கூறுகிருேம். நெசவில் தொய்வின்றி முறுக்குடன் இருக்க ஏற்றப்பட்ட காரிக்கன் சாயவேட்டியினை அவ்வாறு அழைப்பது போல் குசும்பப் பட்டாடையும் அங்ஙனம் பெயர்பெற்றது. இங்கும் 'அருணருண' என்று இரட்டித்து வருகிறது. சின்னஞ்சிறிய, பென்னம்பெரிய என்பன போல், மிகச்சிவந்த என்ற பொருளைத் தருகிறது. அருணம் – சிவப்பு.

## ஆ. பென்னம் பெரியமுலை. முத்தாரம்.

(1) மிகப்பெருத்த திருமுலைகளும், முத்துமாலையும் உடையவள் அபிராமி.

(2) பர அபர ஞானங்களாகிய மிகப்பெரிய திருமுலைகளை 'பென்னம்பெரிய முலை' என்றார். 'இடங்கொண்டு விம்மி' என்ற இடத்தில் விரிவாக விளக்கப்பட்டது.

(3) தியானம் குறித்த இப்பாடலில் அதற்கேற்ப முத்தாரமும் கூறப்பட்டது. பற்றற்று, வீடுபேறு வேண்டித்தியானிக்கும் தவமுடையாரின் துறவு, மற்றும் பற்றற்ற நிலையினை உணர்த்த அவள் அணியும் முத்தாரம் மட்டும் இங்குக்குறிப்பிடப்பட்டது.

## இ. பிச்சி மொய்த்த கன்னங் கரிய குழல்

(1) பிச்சிமலர்களை நெருங்கச்சூடிய மிகக்கரிய கூந்தலையுடையவள் அம்பிகை.

(2) 'பிச்சி' என்பது ஜாதிமுல்லையினைக் குறிக்கும், 'பிஞ்சிலம்' என்பது ஜாதிமுல்லையினைக் குறிக்கும் வட சொல்லாகும். இந்தஜாதிமுல்லையினைச் சிவவழிபாட்டுக்காக மார்க்கண்டேயர் ஆகாய கங்கையுடன் கொணர்ந்தார் என்பது தலவரலாறு இன்றும் திருக்கடவூரில் தட்சிணுமூர்த்தி சந்நிதிக்கருகில் இம் முல்லைக் கொடி மேடைகட்டிப் பாதுகாக்கப்பட்டு வருகிறது.

இஃது ஆண்டுமுழுவதும்மலரும் இயல்புடையது. "புஷ்பேஷு ஜாதி" என்பது வழக்கு. மலர்களில் சிறந்தது ஜாதிமுல்லை என்பது அதன் பொருள். அவ்வாறு உயர்வு பெற்ற மலரினை அபிராமி நெருக்கமாக அணிகிருள்.

(3) மிகவும் கருத்த கூந்தலைக் கன்னங்கரியகுழல் என்ருர். சகஸ்ரநாமம் கன்னங்கரிய குழலை 'நீலசிகுரா' என்ற நாமத்தில் குறிப்பிடுகிறது. சகஸ்ரநாமத்தின் தொடக்கப் பகுதியிலேயே 'கேசாதிபாதம்' வருணிக்கப்பட்டுவிட்டது. எனினும் சகஸ்ர நாமங்களை எடுத்துப்பாடிய வாக்தேவிகள் நிர்குணப்ரம்ம நிலையினை (உருவம், குணம், குறியற்ற நிலையினை) குறிப்பிடும் இடத்தில் மீண்டும் 'நீல சிகுரா' (கரிய கூந்தலையுடையவள்) என்றனர்.

மறைந்துநின்று அம்பெய்திய இராமனை வாலி வன்மையாகச் சாடுகிருன். அதற்கிடையில், அவன் முன்நின்ற இராமனின் அழகினையும் வருணிக்கிருன். "ஓவியத்து எழுத வொண்ணு உருவத்தாய்" என்கிருன்.

அவ்வாறே தாடகையின் கொடுமையினைக் கூறிவந்த விசுவாமித்ர முனிவர் "ஆடவர் பெண்மையை அவாவும் தோளினுய்" என இராமன் அழகினைப் புகழ்கிருர்.

அவனது அழகு காண்பாரைத் தம்மையே மறக்கச்செய்யும் அழகு என்பது தெளிவு. அதுபோல் கன்னங் கரிய குழலினைக் கண்ட வாக்தேவிகளும் தங்களையே மறக்கின்றனர். நாம் பாடுவது உருவமற்ற நிலைகுறித்தபகுதி என்பதனை மறந்துவிடுகின்றனர். அம்பிகையின் அவையின்கண் நின்று பாடிய அவர்கள் அம்பிகையின் கூந்தலழகினை மீண்டும் வருணித்து விடுகின்றனர். வாக்தேவிகளையும் தம்மை மறக்கச்செய்தஅழகு தன்னந் தனியிருந்து தியானிப்பவரின் கருத்திலும் நிலைபெறுகிறது என்பதில் வியப்பில்லை.

## ஈ. கண் மூன்று

(1) அம்பிகைக்கும் மூன்று கண்கள் உண்டு என்கிருர்.

(2) சிவகுடும்பத்தில் எல்லோருக்கும் மூன்று கண்கள் உண்டுஎன்பதனை முன்பேகண்டோம். சூரிய-சந்திர-அக்னியே அம்மூன்று கண்கள்.

(3) 'கா' என்பது சரஸ்வதியைக் குறிக்கும் எழுத்து, 'மா' என்பது லட்சுமியைக் குறிக்கும் எழுத்து. அவ்விருவரையும்

கண்களாகப் பெற்றவளே 'காமாட்சி' என்று அழைக்கப் பட்டாள். அத்துடன் துர்க்கையினையும் மூன்ருவது கண்ணுக வுடையவள் ஆதிபராசக்தியாகிய அம்பிகை எனக் கூறுவர். எனவே மூவரையும் கண்களாகவுடைய "முக்கண்ணியைத் தொழுவார்க்கு ஒரு தீங்கில்லை" என்பார் நூற்பயன் கூறும் பாடலிலும்.

(4) த்ரிநயனு, த்ரியம்பிகா, த்ரிலோசனு ஆகிய சகஸ்ர நாமங்களிலும் அவள் மூன்று கண்கள் பெற்றிருத்தல் குறிப் பிடப்படுகிறது.

## உ. கருத்தில் வைத்துத் தன்னந்தனியிருப்பார்க் கிதுபோலும் தவம் இல்லை

(1) மேற்கண்டவாறு சிற்றிடை, செம்பட்டு, பெருமுலை, முத்தாரம், கருங்குழல், கண்மூன்று ஆகியவற்றினையுடைய திரு வுருவத்தினை மனதில் தியானித்துத் தனிமையில் இருப்பவர் களுக்கு இதைவிட வேறு தவநெறி ஏதும் இல்லை என்கிருர்.

(2) சிவனைப் பாடுதல், சிவச்சிந்தனை, சிவத்தொண்டு ஆகிய தவநெறியினைச் சுந்தரர் இறைவனிடம் வேண்டிப் பெற்றது போல், அம்பிகைத் தியானமே பெருந்தவநெறியாகும் என்கிருர்.

(3) அத்தகைய ஞானிகள் தன்னந்தனியிருப்பார் என்ருல் அது 'யாருமில்லாத ஏகாந்தக் காட்டில் இருக்கும் நிலை' என்பது மட்டும் பொருளல்ல. அத்தகையயோர் – அந்தத் தியானநிலை கைவரப் பெற்ருேர், பலர்சூழ இருந்தாலும் அவர்கள் கருத்தால் தனியிருப்பவர்கள். அம்பிகை தியானம் என்னும் ஏகாந்த உலகில் சஞ்சரிப்பவர்கள்.

நம்முடன் அளவாளாவிக்கொண்டிருக்கும் ஒருவர் ஆழ்ந்த சிந்தனை வயப்பட்டிருந்தால் நமது பேச்சும் வெளியுலக விஷ யங்களும் அவரது காதில் விழுவதில்லை. "ஏனப்பா! எந்த உலகத்தில் இருக்கிருய்" என நாம் அவரை வினவி இவ்வுலகச் சிந்தனைக்குக் கொண்டுவருகிருேம். அவ்வாறுதனித்ததியானமே இங்குத் தன்னந்தனியான நிலையாகக் குறிப்பிடப்படுகிறது.

அபிராமி பட்டரும், இராமகிருஷ்ண பரமஹம்சரும் இவ்வுல கினைவிட்டு விலகிச்சென்று தனி ஆச்சரமத்திலோ, வனத்திலோ வாழவில்லை. இராமகிருஷ்ணரின் வாக்குப்படி அவர்கள் உலகில் பலருடனேயே இருந்தனர். ஆனல் உலகம் அவர்களுக்குள்

இருந்ததில்லை. அதாவது பிற உலகியல் சிந்தனைகள் இல்லாத தன்னந்தனி இருந்ததிலை. அவர்களுக்கு வேறு தவங்கள் வேண்டுவதில்லை என்பதே கருத்து.

(4) " இனிய தென்முலை இருக்கும் குமாரி
தனியொரு நாயகி தானே தலைவி
தனிப்படுவித்தனள் சார்வு படுத்து
நனிப்படு வித்துள்ளம் நாடி நின்றுளே "

என்று அம்பிகை தனிப்படுவித்த நிலையினைக்கூறும் திருமந்திரம் இங்கு ஒப்புநோக்கிச் சிந்தித்தற்குரியது.

(5) அம்பிகையின் அருள் ஒன்றினை மட்டுமே நாடித் தியானித்திருக்கும் நிலைகூறும் இப்பாடலைக் 'காமகலா த்யானம்' அமைந்த பாடல் என்கிறார் உரையாசிரியர் சண்முகநாதன் அவர்கள்.

. தியானஸ்லோகங்களில் இத்தகைய உருவம் வருணிக்கப் பட்டிருப்பதனையும் சுட்டிக்காட்டி இவ்வருணனைகளே அர்ச்சா ருபங்களை வடிக்க உதவும் குறிப்புக்கள் என்றும் விளக்குகிறார்

(6) " நாட்கொண்ட கொங்கைத் துணையும் பொன்மேனியும்
[ நஞ்சளித்த
வாட்கொண்ட நாட்டமும், தொண்டைச் செவ்வாயும்
[ மருங்குடுத்துத்
தோட்கொண்ட செம்பட்டும் முத்தாரமும்கொண்டு
[ தோன்றினளை
ஆட்கொண்ட நாயகியே! மதுராபுரி அம்பிகையே. "

என்ற மதுராபுரி அம்பிகைமாலைப் பாடலில் இதேவடிவம் குறிப்பிடப்படுகிறது.

(7) " கட்டிய செம்பட்டும், முத்தாரமும், நின்கணவரைப்
[ போய்த்
தெட்டிய கண்ணும் திருநெடுந்தோளும் தெளிந்துதருக்
கொட்டிய மென்மலர்க் கூந்தலும் சாந்தக் குழம்பலம்ப
முட்டிய கொங்கையுமாய் உலகே! வந்தென்
[ முன்நிற்கவே ',

என்பது அதேவடிவினைக் குறிப்பிடும் நமச்சிவாயரின் உலகம்மை கலித்துறை அந்தாதிப் பாடல்.

தியானம் கூடுதலும் சிற்பக்கலையில் தேர்ச்சி எய்துதலும் இப்பாடலின் பாராயண பலன் ஆகும்.

( தொடரும் )

ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிக சுவாமிகளின்

# திருவருட்பாத் திரட்டு

( பொழிப்புரையுடன் )

வித்துவான் திருமதி. ப. நீலா எம். ஏ.,

( மலர் 43, இதழ் 11, பக்கம் 546 இன் தொடர்ச்சி. )

பானத்த னந்தப் பயோததியிலே பணப்
பாம்பணையில் வாழவைத்தாய்
பங்கயன் போற்றிடச் சத்ய லோகத்திலே
பங்கயத் துறைய வைத்தாய்
வானத்தி லிந்திரனும் வழிபாடு செய்திட
மணித்தவிசில் வாழவைத்தாய்
மற்றனந்தங் கோடி பேர்களுக் கருளியே
மட்டில் தானங் கொடுத்தாய்
ஏனத்தின் விழிகாண அரிதாகி யெங்குநிறை
யெந்தை யல்லாது துணைவே
றில்லையென் றுன்னைத் துதித்துத் துதித்துருகும்
எனையழைத் தானந்தமா
கானத்தில் வாழவைத் தருள்தரா விடிலுனது
கருணையின் பெருமை என்னும்
காசியெனு மொருவார ணசிநக ரானந்த
காலவயி ரவநாதனே, (10)

(பொ - ரை) காலவயிரவப்பெருமானே! வெள்ளைநிறச் சங்குடைத் திருமாலை பாற்கடலில் படங்களுடைய ஆதிசேடனென்ற இருக்கையில் வாழவைத்தனை, பிரமன் போற்றவே அவனை சத்யலோகத்தில் தாமரையில் தங்கவைத்தாய், வானிலுள்ள இந்திரனும் வழிபாடு செய்திட அழகிய இருக்கையில் இருத்தி அரசோச்சவைத்தனை. மற்றும் அனேககோடி பேர்களுக்கு குறைவிலா தானமருளினாய். பன்றியின் கண்களுக்குப் பார்க்க அரிதாகி எங்கும்நிறை எந்தையே! நீயன்றித் துணை வேறில்லை என்று துதித்துருகும் என்னை அழைத்து ஆனந்த கானத்தில் வாழவைத்து அருள்செய்யாவிடில் உனது கருணையின் பெருமை என்னவாகும்?

(கு-ரை) நந்து - நத்தை; சங்கு. பாறிறமுடையல் சங்கு. " சங்கு சுட்டாலும் வெண்மை தரும் " (முதுரை - 4.) முன்றுமெழுத்தோன்றிய எதுகைக்காக நந்து - ' நத்து ' எனத் திரிந்தது. தானம் - பதவி - பொருள் - வாழ்நாள் என்பன ஆனந்தகானம் - காசிநகரம்.

பரிவினுடன் யான்மூழ்கு தீர்த்தமெல் லாமுனது
பண்புதரு கங்கை யென்பேன்
பகரவரு முத்தலத் தெத்தலமு முத்தநின்
பத்தர்பணி காசி யென்பேன்
குருலிங்க ஜங்கமத் தின்பூசை நின்பதங்
கும்பிடுத லென்றுரைப் பேன்
கொள்ளைமா தவமெலா நின்னடியர் தாள்தலைக்
கொள்வதே யென்று கொள்வேன்
அரிபிரமர் பணிகாசி நகரையென் மரணபரி
யந்த மகலா திருந்தே
அதிமதுர கவிமாலை யாலுனை யலங்கரித்
தானந்த வுல்லாசமாங்
கருணையங் கடலிற் படிந்து விளை யாடநீ
கனிந்தருள்வ தெந்த நாளோ
காசியெனு மொருவார ணசிநக ரானந்த
கால வயிரவ நாதனே, (11)

(பொ-ரை) அன்புடன் யான் மூழ்கும் நீரெல்லாம் உனது பண்பான கங்கை என்பேன். முத்தலங்களுள் நின்பக்தர்பணி காசியே எல்லாத் தலமாகவும் (பெருமைகளை அடக்கிய வகையில்) உள்ளது, குருலிங்க சங்கம வடிவு பூசைகள் நின்திருவடி கும்பிடுதலே என்று உரைப்பேன். மதிப்பு மிகுந்த தவமெலாம் நின்னடியர்தாளைத் தலைக்கொள்வதே என்று கொள்வேன் திருமால், பிரமர் பணி காசிநகரை என் மரணகாலம் வரைக்கும் அகலாதிருந்து இனிமைநிறை கவிதை மாலைகளை உனக்கு அணிவித்து அழகுசெய்வது மகிழ்வுதரும் கருணைக்கடலில் நான் படிந்து விளையாட - நீ கனிந்தருள்வது எந்தநாளோ கால வயிரவநாதனே !

(கு-ரை) கங்கைக்கும் காசிக்கும் விசுவேசருக்கும் இணை - இவ்வுலகில் இல்லையென்பார் குமரகுருபரரும்,

" காணும் காணு நதிகளெல் லாம்புனற்
கங்கையே யங்குள தெய்வம் யாவையும்
தாணு வெங்க ளகிலேச ரேமற்றைத்
தலங்கள் யாவுந் தடமதிற் காசியே "

(காசிக் கலம்பகம்-17.)

இப்பாட்டில் ஏகாரம் எதிர்மறைப்பொருளில் வந்து, இம் மூன்றின் பெருமையையும் காட்டியது என்பர். அவ்வேகாரம் உடன்பாட்டுப்பொருளில் வந்ததாகக்கூற இத்திருவருட்பா துணைசெய்கிறது. முத்தலம் – பூமி அந்தரம் சொர்க்கம். மேல் கீழ் நடு என்ற உலகங்கள் என்றலும் ஆம். ஈற்றடியில் கரைந் தருள்வதெந்தநாளோ என்றிருக்கின்றது. கரைந்தருளுதல் – எந்தப்பொருளையும்தரவில்லை, 'ன' கரத்தின் மேலிட்ட கொம்பு-பக்கத்தில் எழுதப்பட்டதோ என ஐயம்வருகிறது. அப்படி அமையுமானால் " கனிந்தருள்வது " சிறப்புடைய பொருள் உணர்வு காட்டவல்லதாகிறது. ( தொடரும் )

---

# குருமணியின் அருள்மொழி

## இறையருளும், எண்ணமுமே எல்லாவற்றிற்கும் அடிப்படை

எந்தச் செயலும் இறைவன் அருளால் அன்றி நிகழாது. இதனை "அவனன்றி ஓர் அணுவும் அசையாது" என்று தாயுமானர் குறிக்கின்றார். " ஆட்டுவித்தால் யாரொருவர் ஆடாதாரே!" என்று அப்பர் பெருமானும் இக்கருத்திலேயே விளக்கியிருக்கின்றார். ஒரு சில திருப்பணிகள் விரைவிலேயே நிறைவு பெறுகின்றன. ஒரு சில திருப்பணிகள் தொடங்கப் பெற்றுப் பல ஆண்டுகள் ஆகியும் நிறைவுபெறாமல் உள்ளன. இவற்றிற் கெல்லாம் காரணம் நம்பர் அருளாமையினால் ஆங்காங்குள்ள மக்கள் மனோபாவமும் செயல் முறைகளும் நன்கு இயங்காமையே ஆகும். மக்களின் மனநிலையை ஒட்டித்தான் இறைவன் திருவருளும்நிகழ்கிறது. எண்ணியது நிறைவேற வேண்டுமாயின் எண்ணம் சரியாகவும் முறையாவும் இருத்தல் அவசியம். எனவே நாடு நலமுற வீடு நலமுற அமைதல் இன்றியமையாததாகும் ...... எந்த நாட்டில் நல்லவர்களும், திறமையுள்ளவர்களும், உழைப்பாளிகளும் இருக்கிறார்களோ அந்த நாடும் ஊரும் நலம்பெறும் என்பது உண்மை. நல்லவர்களும், உழைப்பாளிகளும் இல்லாத நாடும் ஊரும் நலம் பெறுவது என்றும் இயலாதது என்பது கண் கூடு.

# வினை

வித்துவான் திரு. கா. ம. கண்ணப்பன் எம். ஏ.

[தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் 7—10—1984 ஆங்கிலமாதம் முதல் ஞாயிறன்று வழங்கிய அருளுபதேசத்தையொட்டி எழுதப் பெற்ற கட்டுரை.]

குருமணிகள் அருளுபதேசநாள் அது! அடியேன் காலை 9-50 க்கே திருமடம்நோக்கிச் சென்றேன். திருமடத்தின்பிரதான வாயில். அடுத்து அஷ்டலட்சுமிக்கட்டு. இடையே அழகான மண்டபம். அதில் அற்புதமான கலைவண்ணம்காட்டும் எழில் மிகு புடைப்புச் சிற்பங்கள். அடியேன் சற்றே கண்செலுத்துகிறேன்.

முகப்பிலிருந்து ஐந்தாம்தூண் வடக்கு நோக்கியவாறு ஒரு முனிவர் நிற்கிறார்! இடக்கையில் சிவலிங்கம்! வலக்கையில் மலர்! நின்றநிலையிலிருந்து பெருமானை அர்ச்சிக்கிறார். அற்புதமான காட்சியை ரசிக்கிறேன். அது யாராக இருக்கக்கூடும்! – இப்படிச் சிந்திக்கும்போது நேரம் காலை மணி 10.

'அரஹர மகாதேவா' – பண்டாரக்கட்டில் இனிய மகுட ஓசை எழுகிறது. திருக்கோயில் வழிபாடு முடித்து ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் பண்டாரக்கட்டிற்கு எழுந்தருளிச் சித்ராசனத்து அமர்ந்தார்கள். அன்பர்களோடு அடியேனும் திருநீறு பெற்று உய்ந்தேன்.

பாராயணம்! அடுத்துக் குருமணிகளின் உபதேசம் தொடங்க இருக்கிறநிலை! புதுக்கோட்டை அன்பரும், சைவ சித்தாந்தப்புலவரும், மலேசியாவில் பெருவணிகராக விளங்குபவரும், நுண்மாண் நுழைபுலம் மிக்கவரும் ஆகிய திரு. பழ. இரத்தினம் செட்டியார் அவர்களைச் சொற்பொழிவு ஆற்றுமாறு பணித்தார்கள்.

திரு. செட்டியார் அவர்கள் "திருஞானசம்பந்தர் திருவாக்கில் வினை" என்பது பற்றி ஒருமணிநேரம் சிறப்பாகச் சொற்பொழிவாற்றினார்.

"முன்னைய பிறவிகளில் ஈட்டியதும் அதில் அனுபவித்தது போக எஞ்சியிருப்பதுமாகிய வினை சஞ்சிதம் எனப்படும். இதனைத் தொல்வினை என்பர்; பழையபிறவியில் செய்ததில் ஒருபகுதியை இப்பிறவியில் அனுபவிக்கும் வினை பிராரத்தம்; பிராரத்தத்தை அனுபவிக்கும்போது மேல் வரும் வினைகள் ஆகாமியம் எனப்படும். இதனை வருவினை என்பர். இம்மூவகை வினைகளும் உறுதிப்பாட்டோடு திருமுறைகளை ஓதினால்தீரும்" இக்கருத்தினைத் பல தேவாரப் பாடல்களைக் கொண்டு விளக்கினார்.

"திருநெறிய தமிழ்வல்லவர் தொல்வினை தீர்தல் எளிதாமே" என்னும் தொடர் சஞ்சிதகன்மம் தீரும் என்பதையும்,"இம்மைக்கும் மறுமைக்கும் வாதியாவினை; வருத்தம்வந்து அடையாவே" என்னும் தொடர் பிராரத்தம் தாக்காது, ஆகாமியம் வராது என்பதையும் "மேல் வினை வாராவே" என்பது ஆகாமியம் தோன்றாதுஎன்பதையும் விளக்கும் திருமுறைத்தொடர்களாகும். இவ்வாறு மூவகை வினைகளையும் திருமுறை ஓதுவதால் நீக்கலாம் என்பதைப் பல சான்றுகள் காட்டிநிறுவினார்கள்.

அடுத்துக் குருமணிகளின் உபதேசம்.

முதலில் ஸ்ரீ குருஞானசம்பந்தர் திருவாக்கில் வினைபற்றிய இருபாடல்களை இசையுடன் ஓதி விளக்கினார்கள்.

"அவரவர் வினைவழி அவரவர் வந்தனர்
அவரவர் வினைவழி அவரவர் அனுபவம்
எவரெவர்க்கு உதவினர் எவரெவர்க்கு உதவிலர்
தவரவர் நினைவது தமையுணர் வதுவே".

"இன்னவினை இன்னதலத் தின்னபொழு தின்னபடி
இன்னதனால் எய்தும் என அறிந்தே — அன்னவினை
அன்னதலத் தன்னபொழு தன்னபடி அன்னதனால்
பின்னமறக் கூட்டும் பிரான்"

"வினை – செயல்; விதி – சட்டம். வினைவேறு; விதிவேறு – வினைக்கு ஏற்ப விதி அமையும். செயலுக்கு ஏற்ற அனுபவம் ஏற்படும்."

திருமுறைகளைஓதினால் வினைதீரும், திருமுறை ஓதவேண்டும் எனநினைத்தால் அந்தச் செயல் எல்லாருக்கும் வாய்க்குமா? அதுவும் விதிவழிதானே ஆகும்.

முயற்சி செய்யவேண்டும்; முயற்சியும் விதிவழிதான் செல்லும்; "முயற்சி தன்மெய்வருத்தக் கூலிதரும்" என்பது குறள்மொழி.

திருமுறை ஓதி வினை தொடராமல் இருக்கும் வழிகாண விரும்புவோர் அத்தகைய விதி இல்லாவிடில் திருமுறை ஓத இயலாமல்போகும்.

"ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித், தாழாது உஞற்றுபவர்" என்றார் திருவள்ளுவர். அதற்கும்விதியமைந்திருந் தால்தான் முடியும்.

இப்படிப் பலகருத்துக்களை அருளியகுருமணிகள், திருமுறை ஓதுவதிலும் சிலமுறைகளை அனுஷ்டிக்கவேண்டும் எனக் குறித் தருளினார்கள்.

தம் வினையற்றுப் போகவேண்டும் எனக்கருதும் ஒருவர் ஒருமுறை, சிலமுறை எனஓதினால் போதுமா? பலகாலும் ஓத வேண்டும்; இடைவிடாமல் ஓதவேண்டும்.

ஓர் எடுத்துக்காட்டும் தருகின்றார்கள்.

"இரும்பை உருக்க வேண்டும்; சிறிதளவு உஷ்ணப்படுத் தினால் போதுமா? இரும்பு உருக மிகுந்த வெப்பம் தேவை!"— இதுபோலவே வினைநீங்க இவ்வளவு முறை அவ்வளவு முறை என்ற கணக்கில் வைத்துக்கொள்ளக்கூடாது. அவரவர் வினை தீருதற்கு ஏற்ப விடாமல் ஓதவேண்டும். மேலும், "அடுத்து முயன்றாலும் ஆகுநாள் அன்றி எடுத்தகருமங்கள் ஆகா" என்று அருளி விதிவழியே மதிசெல்லும் என்று விதியின் வலிமையை விளக்கினார்கள்.

இங்ஙனம் விதிபற்றிய கோட்பாடுகளை விளக்கியருளிய குருமணிகள் திருநாவுக்கரசர் புராணச் சிந்தனையாக,

"பண்பெனப்படுவது பாடறிந்து ஒழுகல்"— இது கலித் தொகையில் காணும் தொடர். மனிதனின் பழக்கம் தகுதிக்கு ஏற்ப அமையவேண்டும். மனைவியிடமும் புதல்வர்களிடமும் பணியாளர்களிடமும் நண்பர்களிடமும் மனிதனின் பழக்கம் வேறுபடுகிறது. தாம் பெற்றமக்களிடம்பழகும்போது வயதுக்கு ஏற்பப்பழகும்முறை வேறுபடுவதையும் உலகியலில்காணலாம். — இவ்வாறு பழகும்முறைபற்றியருளித் தற்காலச்சமுதாயத்தில்

பழகுமுறை சீர்குலைந்து வருவதையும் குறிப்பிட்டார்கள். நாம் முன்னோர் நெறியைப்பற்றியே ஒழுகவேண்டும் என உபதேசித்தார்கள்.

"பண்பாடுகளைச் சமயாசாரிகளிடம் கற்கவேண்டும். சீகாழியிலிருந்து நாவுக்கரசருடன் ஞானசம்பந்தரும் சேர்ந்து திருக்கோலக்கா யாத்திரை செய்கின்றார். மேலும் திருப்புகலூரிலிருந்து வேதாரண்யம் வரை இருவரும் சேர்ந்தே யாத்திரை செய்து பதிகம்பாடிப் பரவினர்.

அதுமட்டுமா? சமயாசாரியர்கள் ஒரு தலத்தினின்று இன்னொரு தலத்திற்குச் செல்ல அவ்வத்தலத்து இறைவனிடம் உத்தரவு பெற்றே சென்றனர் என்பதையும் எண்ணிப் பார்க்க வேண்டும்-இங்ஙனம் உயர்நெறியை உலகுக்கு அருளியவர்கள் நம் ஆசாரியர்கள்.

இந்திரன் சீகாழியில் இறைவனை வழிபட்டுப் பயன் பெற்றமை, சூரன் தவம் செய்து வரம் பெற்றமை முதலிய புராண எடுத்துக்காட்டுக்கள் மூலம் தவத்தின் சிறப்பு, வழிபாட்டின் பலன் முதலியவற்றை மனம்கொள்ளும் முறையில் உணர்த்தியருளினார்கள்.

எனவே, தேவாரம் முதலிய திருமுறைகளைப் பக்தி சிரத்தையோடு - நியதியாகப் - பொருள் உணர்ந்து ஓதுதலும் இறை வழிபாடுமே நம்மை உய்விக்கும் உயர்நெறிகள்; ஆசாரியர்கள் காட்டிய நல்வழியில் நடப்பதே நாம் உயகும் நெறி - என்று முத்தாய்ப்பாக அருளினார்கள். அன்று 30 நிமிடநேரமே உபதேசம் நிகழ்ந்தது. அதுவும் வினைபற்றிய ஆய்வாகவே அமைந்தது.

நேரம் மணி 12-30 மங்கல வாழ்த்துடன் மனநிறைவுடன் வெளியே வருகின்றோம்.

மழை பெய்தமையால் சற்றே குளிர்ச்சியாக இருந்தது அந்நாள்! தேநீர் கொடுத்தார்கள். பதமானசூடு; இதமாக இருந்தது. அருந்தினோம். மகிழ்ச்சியாக இல்லம் திரும்பினோம்.

வாழ்க குருமணிகள்!



# செய்திகள்

## ஆயில்யத்திருநாள் ஆலய வழிபாடு

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் ஜன்ம நட்சத்திரமாகிய ஆயில்யத்திருநாளில் தேவாரப்பாடல்பெற்ற சிவத்தலங்களில் சிறப்புவழிபாடுகள் நிகழ்ந்து வருகின்றன. இம்மாதம் 19—10—84 வெள்ளிக்கிழமையன்று திருமுதுகுன்றம்-விருத்தாசலம் தலத்தில் ஆயில்யத்திருநாள் வழிபாடு மிகச்சிறப்பாக நடைபெற்றது. சுவாமி அம்பாளுக்குச்சிறப்புவழிபாடுகள் நிகழ்ந்தன திருப்பதிகப் பாராயணம் நடைபெற்றது. "திருமுதுகுன்றதிருப்பதிகங்கள்" என்றநூல்வெளியிடப்பெற்றது தருமையாதீனத் தமிழ்ப்புலவர்வித்துவான் திரு. வி. சா. குருசாமிதேசிகர் எம். ஏ. விரிவுரையாற்றினர். அன்பர்பலர் வழிபாட்டிற் கலந்து கொண்டுபயன்பெற்றனர்.

## ஸ்ரீ மெய்கண்டதேவர் குருபூஜை

சந்தான குரவருள் முதல்வராகிய ஸ்ரீ மெய்கண்டதேவர் குருபூஜைத்திருநாள் வழிபாடு ஐப்பசிச் சுவாதிநாள் கூடிய 25—10—84 வியாழக்கிழமையன்று காலை தருமையாதீனம் ஸ்ரீ ஞானபுரீசுவரர்திருக்கோயிலில் விசேஷ அபிஷேக ஆராதனைகளுடன் நடைபெற்றது. மாலை 7 மணியளவில் தருமையாதீனத் தமிழ்ப்புலவர் வித்துவான். திரு. வி. சா. குருசாமிதேசிகர் எம்.ஏ, 'சிவஞானபோதம்' என்னும் பொருளில் உரையாற்றினர். காலை மாலை இருவேளைகளிலும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் எழுந்தருளி வழிபாடாற்றி, அருட்பிரசாதம் வழங்கினர்கள். அன்பர்கள் பலர் கலந்துகொண்டு வழிபட்டுப்பயன்பெற்றனர்,

அன்றுகாலை பெண்ணாகடம் ஸ்ரீமெய்கண்டதேவர் ஆலயத்திலும், திருத்தூங்கானை அருள்மிகு கடந்தைநாயகி உடனுகிய சுடர்க்கொழுந்தீசர் திருக்கோயிலிலும் விசேஷ அபிஷேக ஆராதனைகள் நிகழ்வுற்றன. பெண்ணாகடம் குருமூர்த்த ஆலயத்தில் சாத்திரவிரிவுரை நிகழ்வுற்றது. அன்பர்பலர் வழிபட்டும் விரிவுரைகேட்டும் பயன்பெற்றனர்.

## குருவருளும் அருளுபதேசமும்

தருமையாதீனத் திருமடத்தில் ஒவ்வொரு ஆங்கிலமாத முதல் ஞாயிறன்றும் காலை சரியாகப் பத்துமணிக்கு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தை அன்பர்கள் வணங்கி வழிபட்டு அருளுபதேசம்பெறும் பிரார்த்தனை வழிபாட்டுக் கூட்டம் நிகழ்ந்துவருகிறது, இம்மாதம் 4—11—84 அன்று 41 ஆம் அருளுபதேசம் நிகழ்வுற்றது.

முதலில் வழிபாடும் கூட்டுப்பிரார்த்தனையும் நிகழ்ந்தன. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் திருத்தொண்டர் புராணச் சிந்தனையாகத் திருநாவுக்கரசர் சீகாழித்தலத்தில் திருஞான சம்பந்தரைச் சந்தித்தது முதல் திருமறைக் காடு தலம் அடைந்தது உரையிலான பகுதியை உபதேசித்தருளினர்கள். அருளுபதேசத்தில் திருநாவுக்கரசர் வழிபட்ட தலங்களைப்பற்றி முறையாக எடுத்துவிளக்கித் தலப்பெருமைகளையும் சுருக்க மாகவும் இனிமையாகவும் அருளினர்கள். வரலாற்றின் போக்கி லேயே - அதன்கண் செறிந்துகிடக்கும் தத்துவங்களைச்சாரமாக உபதேசித்தார்கள்.

மயிலாடுதுறை அன்பர்களும் பக்தர்களும் கலந்துகொண்டு பயன்பெற்றனர். அடுத்து 2—12—84 அன்று 41 ஆம் அருளுப தேசம் நிகழ இருக்கிறது. அன்பர்கள் கலந்துகொண்டு பயன் பெறுக.

## ஸ்ரீல ஸ்ரீ கயிலைக் குருமணிகுருபூஜைவிழா

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்தின் 25 ஆவது குருமகாசந்நிதானமாக எழுந்தருளியிருந்து 26½ ஆண்டுகள் அருளாட்சி செய்தருளிய ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணிகளின் பதின் மூன்றும் ஆண்டுக்குருபூசை விழா 17—10—84 புதன் கிழமையன்று குருமூர்த்த ஆலயத்தில் மிகச்சிறப்பாக நடை பெற்றது. காலை, மாலை இருவேளைகளிலும் தருமையாதீனம் ஸ்ரீல ஸ்ரீ குருமகாசந்நிதானத்தில்எழுந்தருளி விசேஷ அபிஷேக ஆராதனைகள் நிகழ்த்தி, அன்பர்கட்குக் குருவருட்பிரசாதம் வழங்கியருளினர்கள்.

காலை வழிபாட்டின் பின்னர் 'ஆதீனக்குருபரம்பரை'பற்றிச் சொற்பொழிவுகள் நிகழ்வுற்றன. வித்துவான் வி. சா. குருசாமி தேசிகர், எம். ஏ., வித்துவான் திரு சொ. முத்தையன், எம். ஏ.,

திரு. சா. கிருஷ்ணமூர்த்தி, எம். ஏ., வித்துவான் திரு. மு. சிவச் சந்திரன் எம். ஏ., பி. எட் ஆகியோர் முறையே ஸ்ரீ குருஞான சம்பந்தர், ஸ்ரீ மாசிலாமணி தேசிக குருமூர்த்திகள், ஸ்ரீ திருவம் பலதேசிக குருமூர்த்திகள், ஸ்ரீ சிவஞானதேசிக குருமூர்த்திகள் பற்றி உரையாற்றினர். நண்பகலில் மாகேசுவரபூஜை நிகழ்வுற்றது.

மாலை 6 மணியளவில் சீகாழி திரு. எஸ். முத்துக்கந்தசாமி தேசிகர் குழுவினரின் திருமுறை இசையரங்கு நிகழ்ச்சி நடை பெற்றது. இரவுவழிபாட்டின்போது, அண்ணமலைநகர் முன்னள் தத்துவப் பேராசிரியர் திரு. த. ஐ. ஏசுதாஸ் அவர்கள் எழுதிய "சைவ சமயம்" என்றநூல் விழாமலராக வெளியிடப்பெற்றது. இரவு வழிபாட்டின் அங்கமாக, 'கயிலைக் குருமணியின் வடதல யாத்திரைகள்' என்ற தலைப்பில் அஞ்சலி உரை நிகழ்ச்சி நடை பெற்றது. டாக்டர் திரு. சொ. சிங்காரவேலன், எம். ஏ. பி. எச்டி 'காசி' பற்றியும், புலவர் திரு. இரா. செல்வக்கணபதி, எம். ஏ. பி. எட். ஜோதிர்லிங்கத்தலங்கள் பற்றியும், வித்துவான் திருமதி. ப. நீலா, எம். ஏ., கேதாரம் பற்றியும் வித்துவான் திரு. கா. ம. கண்ணப்பன், எம். ஏ., கயிலாயம் பற்றியும், உரைநிகழ்த்தினர். அஞ்சலி உரை நிகழ்ச்சியின் இடையே சென்னை திரு. இராம ஞதன் அவர்கள் தேவாரப்பண் இசையும் கர்னடக இசையும் பற்றிய ஒப்புநோக்கு ஆய்வாகச் சிலபாடல்களைப்பாடி விளக்க மளித்து உரை நிகழ்த்தினர்கள். ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தில் வழிபாட்டுக்கு வந்திருந்த பக்தர்களுக்கு அருட்பிரசாதம் வழங்கியருளினர்கள்.

### ஸ்ரீல ஸ்ரீ கயிலைக்குருமணி அறக்கட்டளைச் சார்பில்

**ஸ்ரீ காசியில் :**

ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமணி முத்திப்பேறு எய்திய ஸ்ரீ காசி குமாரசுவாமி மடத்தில்ஸ்ரீ குருமணியின் திருவுருவப்படத்திற்குச் சிறப்பு வழிபாடும் ஸ்ரீ விசாலாட்சியம்மை, அன்னபூரணி, ஸ்ரீ கேதாரநாதர் ஆகிய மூர்த்திகளுக்கு விசேஷ அபிஷேக ஆராதனைகளும் நண்பகலில் மாகேசுவர பூஜையும் சாதுக் களுக்குப் பண்டாராவும் சிறப்பாக நடைபெற்றன.

**மயிலாடுதுறையில் :**

மயிலாடுதுறை தெய்வத் தமிழ் மன்றத்தினரால் மகாதானத் தெரு ஸ்ரீ குருஞானசம்பந்தர் பணிமன்ற மண்டபத்தில் நினைவு விழாக் கொண்டாடப் பெற்றது. சொற்பொழிவு நிகழ்ச்சி நடைப்பெற்றது அன்பர்பலர் கலந்து கொண்டு பயன் பெற்றனர்.

**சென்னையில் :**

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணிகள் இறுதியாக வழிபாடாற்றிய சென்னை மயிலாப்பூர் ஸ்ரீகபாலீசுவரர் திருக்கோயிலில் 17-10-84 புதன் அன்று நண்பகலில் அபிஷேக ஆராதனைகளும் மாலை தருமையாதீன சமயப் பிரசார நிலையத்தில் நினைவுச் சொற்பொழிவுகளும் நடைபெற்றன. அன்பர் பலர் கலந்துகொண்டு பயனுற்றனர்.

## தருமையாதீனம் 26 ஆவது ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் ஞானபீடத்து அமர்ந்தநாள்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம் குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் ஞானபீடத்து அமர்ந்தநாள் 21—10—84 ஞாயிற்றுக்கிழமையன்று மிகச்சிறப்பாக நடைபெற்றது. அன்று காலை ஸ்ரீ ஞானபுரீசுவர சுவாமிக்கு ருத்ராபிஷேகமும் விசேஷ அபிஷேக அலங்கார ஆராதனைகளும் நிகழ்வுற்றன. திருமுறைகள் பூசிக்கப்பெற்றுப் பாராயணம் செய்யப்பெற்றது. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்திற்குத் திக்பால விஜய ஸ்தாந சாந்தி. ஹோமம் நிகழ்வுற்றது. ஸ்ரீ அஷ்டா தசபுஜ மகாலட்சுமி துர்க்காபரமேசுவரிக்கு விசேஷ அபிஷேக அலங்கார ஆராதனைகளும், சந்நிதியில் ஸ்ரீ துர்க்கா சூக்த அகண்ட பாராயணமும் நிகழ்ந்தன. விழாவிற் கலந்துகொண்ட அன்பர்கட்கு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் குருவருட்பிரசாதம் வழங்கியருளினார்கள். அன்பர்பலர் குருதரிசனம் செய்து பயன்பெற்றனர்.

## கந்தசஷ்டி விழா

**தருமையாதீனத்தில் :**

அருள்மிகு முருகப்பெருமானுக்குரிய திருநாள்களுள் மிகச் சிறந்ததாகக் கொண்டாடப்பெறும் கந்தசஷ்டிவிழா 24—10—84 முதல் 30—10—84 வரை மிகச்சிறப்பானமுறையில் நிகழ்வுற்றது. தருமையாதீனத்தில் ஆன்மார்த்த மூர்த்தி ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமான் வழிபாட்டுடன் ஸ்ரீ முருகப் பெருமானுக்கும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் சிறப்பு வழிபாடு நிகழ்த்தியருளினார்கள். தருமையாதீனத் தமிழ்ப்புலவர், செஞ்சொற்கொண்டல் டாக்டர் திரு. சொ. சிங்காரவேலன் எம். ஏ., பி. எச்டி., அவர்கள் ஸ்ரீ சொக்கநாதப் பெருமான் பூசை மடத்தில் விழா நாட்களில் நாள்தோறும் மாலை 7-00 மணியளவில் கந்தபுராண விரிவுரை நிகழ்த்தினார்கள். ஆதீன அடியார்களும், அலுவலர்களும் அன்பர்களும் விரிவுரை கேட்டும் வழிபாடாற்றியும் பயனுற்றனர்,




## ஜோதிஷம் திரு. A. இராசமாணிக்கம்

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நடுநிலைப்பள்ளி, திருப்பனந்தாள்.

### ( இரக்தாக்ஷி௵ கார்த்திகைமீ 1௳ முதல் 30௳ முடிய )

### ( 16—1:—1984 முதல் 15—12—1984 முடிய )

ஸ்ரீ இரக்தாக்ஷி௵ கார்த்திகைமீ 1௳ சுக்கிரவாரம் ஆயில்ய நக்ஷத்திரம் பாலவகரணம் கூடியகாலத்தில் சூரியஉதயம் முதல் 2 நாழிகை ௯ விநாடிக்கு வி..ச்சிக லக்கினத்தில் ஸ்ரீ லோக ரட்சகரான சூரியபகவான் துலாராசியிலிருந்து விருச்சிகராசி சங்கிரமணமாக கார்த்திகைமாதப்பிரவேசம் செய்தருளுகின்றார். அன்று விஷ்ணுபதிபுண்ணியகாலம். முடவன்முழுக்குவிசே..ம் சங்கிரமணகால கிரகஸ்திதியினால் உலகில் எங்கும் நல்ல மழை பெய்து நிலங்களில் நல்லவிளைவுஏற்படும். தேசங்களில் பொருளாதாரம் நல்லநிலையில் இருந்துவரும். பிரஜைகளுக்கு ஜீவனோபாய வாய்ப்புக்கள் ஏற்பட்டு முன்னேற்றமடைவர். தேசங்களில் நெருக்கடியாக உள்ள பிரச்சினைகள் அனைத்தும் ஆன்றோர்களின் உதாரநற்குண செயல்களினால் எளிதில் சீரடையும். தேசங்களில் புண்ணிய சீலர்களினால் சிவபுண்ணிய கைங்கரியங்கள் தர்மங்கள் நடந்து உலகம் நீடிக்கும்.

உலகிலுள்ள திருமடங்கள் ஆசாரியபீடங்களில் சிவத்திரு உரு பிரகாசமாகத்திகழ்கின்ற சிவஞானகுருமகான்கள் குருமகா சந்நிதானங்கள் உலகத்திற்கு இறைவனிடம் பக்திசெலுத்துதல், இறைவனைத் துதித்து நன்மனதுடன் செயலாற்றுதல், நேர்மை கடைப்பிடித்தல், அறவழிநிற்றல் ஆகியபண்புஎய்தும்பொருட்டு அருள்கூர்ந்து திருவாய்மலர்ந்து உரைபகர்ந்தருள் அவ்வழியில் மாந்தர்கள் உயர அருளாசி செய்வார்கள். அன்னார்நோக்கில் தேசங்களில்எங்கும் தேவாலயங்களில்நித்தியம் ஆறுகாலபூசைகள் சிறப்புற நடைபெறும். எல்லாபிரஜைகளும் தெய்வபக்தி மேலிட்டுநல்வழிகடைப்பிடித்து செவ்வியவாழ்க்கைநடத்துவர்.

1. மேஷம் :- அசுவதி – பரணி – கார்த்திகை ¼

மேஷராசி 9 பாதங்களும் சுபபலனாக நடக்கும். குடும்ப சுபிட்சார்த்தமாகப் பணவருமானம் நல்ல வசதிகள் ஏற்பட்டுக் கொண்டிருக்கும். அரசாங்கத்திலிருந்து நல்லசெய்திகள்வரும் வீடு வாகனங்களில் நல்ல சௌகர்யம் இருந்துவரும். பரோப கார நற்காரியங்களை ஏற்றுநடத்தும். நவம்பர் 23, 24 தேதிகள் சந்திராஷ்டமம். புதன் வியாழன் சுபம்.

2. ரிஷபம் :- கார்த்திகை ¾ – உரோகிணி – மிருகசீரிஷம் ½

ரிஷபராசி 9 பாதங்களும் மிச்சிர பலனாக நடக்கும். பண வருமானம் கணிசமாகவரும். அடிக்கடி அவசிய செலவினங்க ளும் ஏற்படும். பூமியில் இயந்திரங்களில் அபிவிருத்தி பலன் ஏற்படும். மந்தஸ்திதியாக இருந்த எல்லாக்காரியங்களும் துரித மாக நடக்கும். டிஸம்பர் 5 உ அளவில் மனவல்லல்கள் நீங்கும். நவம்பர் 25, 26 தேதிகள் சந்திராஷ்டமம். வெள்ளி, சனி சுபம்.

3. மிதுனம் :- மிருகசீர்ஷம் ½ – திருவாதிரை – புனர்பூசம் ¾

மிதுனராசி 9 பாதங்களும் சுபபலனாக நடக்கும். பணவரு மானம் எதிர்பாராமல் கணிசமாக வந்து சேரும். அரசாங்கத்தி லிருந்து நல்ல செய்தி வரும். வீடு மனையில் நல்லன ஏற்படச் செய்யும். எல்லாக் காரியங்களும் வெற்றிகரமாக நடந்து கொண்டிருக்கும். சாலை வழியில் விபத்து வந்துதப்பும். நவம்பர் 27, 28 தேதிகள் சந்திராஷ்டமம். ஞாயிறு திங்கள் சுபம்.

4. கடகம் :- புனர்பூசம் ¼ – பூசம் – ஆயில்யம்.

கடகராசி 9 பாதங்களும் மிச்சிர பலனாக நடக்கும். தனவரு மானம் கனிசமாக வரும். நல்ல வகையில் அவசியசெலவுகளும் ஏற்படும். இயந்திர சாதனங்களில் நல்லனவரும். எல்லாக்காரி யங்களும் துரிதமாக நடந்துகொண்டிருக்கும். ஞாயிற்றுக் கிழமை சூரியார்ச்சனைசெய்ய குடல் அழற்சிநீங்கும். நவம்பர் 30 டிஸம்பர் 1 இத்தேதிகள் சந்திராஷ்டமம். செவ்வாய் புதன்சுபம்.

5. சிம்மம் :- மகம் – பூரம் – உத்திரம் ¼

சிம்மராசி 9 பாதங்களும் மிச்சிரபலனாக நடக்கும். பணவரு மானம் அரசகண்யமாக வரும். கௌரவ விஷயங்களில் செல வும் ஏற்படும் திட சித்தமாக எல்லாக் காரியங்களையும் செய்து

கொண்டிருக்கச் செய்யும். நல்ல வாகனம் தரும். புதிய வஸ்து வாங்குதல் ஆகும். புத்திரர் பௌத்திரர்களின் நலம் நன்ருக இருந்துவரும். டிஸம்பர் 2, 3 தேதிகள் சந்திராஷ்டமம். வியாழன் வெள்ளி சுபம்.

6. கன்னி :- உத்திரம் ¾ – ஹஸ்தம் – சித்திரை ½

கன்னியாராசி 9 பாதங்களும் சுப பலனை நடக்கும். நல்ல தனவருமானம் வரும், பூஷணங்களின் பிராப்தியையளிக்கும். பசு பால் பிராப்தி உண்டாகும். புத்திரர் பௌத்திரர்களுக்கு நல்ல நிலைமையாகும். எல்லாக்காரியங்களும் நல்ல விதத்தில் நடந்துகொண்டிருக்கும். டிஸம்பர் 4, 5, 6 தேதிகள் சந்திராஷ்டமம். ஞாயிறு திங்கள் சுபம்.

7. துலாம் :- சித்திரை ½ – சுவாதி – விசாகம் ¾

துலாராதி 9 பாதங்களும் மிச்சிரபலனை நடக்கும். தனவருமானம் கணிசமாக வந்துகொண்டிருக்கும். நல்ல பூஷணம் தரும். உயர் சமானேர் ஒருவர் சிறிது காலம் விலகி இருப்பர். புத்திரர் பௌத்திரர்கள் நல்லஸ்திதியில் இருப்பர். எல்லாக் காரியங்களும் எளிதில் செயல்படும். டிஸம்பர் 7, 8 தேதிகள் சந்திராஷ்டமம். செவ்வாய் புதன் சுபம்.

8. விருச்சிகம் :- விசாகம் ¼ – அனுஷம் – கேட்டை.

விருச்சிகராசி 9 பாதங்களும் மிச்சிரபலனை நடக்கும். குடும்பத்தில் பணவரவுகள் பெருமதிப்பில் வந்துசேரும். அதற்கேற்ப செலவும் ஏற்படும். பூமியில் செந்நெல் பிராப்தி மிகுந்து வரும். மனேபலம்மிகும். எல்லாக்காரியங்களையும் சமயோசித புத்தியினுல் எளிதில் நடத்தல் ஆகும். டிசம்பர் 9, 10 தேதிகள் சந்திராஷ்டமம். வியாழன் வெள்ளி சுபம்.

9. தனுசு :- மூலம் – பூராடம் – உத்திராடம் ¼

தனுர்ராசி 9 பாதங்களும் மிச்சிரபலனை நடக்கும். தன வருமானம் தரும். நெருக்கடியான செலவும் ஏற்படும். அவசர வார்த்தையினின்றும் சிலவிஷயங்களில் தடை சிக்கல் காணும். ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிக்கு அருச்சனை செய்தல் நலம். நல்லோர் நட்பால் எல்லாவற்றிலும் நல்லன ஏற்படும். காரிய சாதனை ஆகும். டிசம்பர் 11, 12, 13 தேதிகள் சந்திராஷடமம். சனி, ஞாயிறு சுபம்.

10. மகரம் :- உத்திராடம் ¾ - திருவோணம் - அவிட்டம் ½

மகரராசி 9 பாதங்களும் சுபபலனை நடக்கும். பண வருமானம் வந்து கொண்டிருக்கும். சுப நிகழ்ச்சிகளில் செலவும் ஆகும். சகோதரர் புத்திரர்களின் நலனில் ஸ்திரி வகையினர் நலனில் குலகௌரவத்திற்காக ஈடுபாடு அதிகரிக்கும். எல்லாக் காரியங்களும் கௌரவத்துடன் நடந்து கொண்டிருக்கும். டிசம்பர் 14, 15 தேதிகள் சந்திராஷ்டமம். செவ்வாய் புதன் சுபம்.

11. கும்பம்:- அவிட்டம் ½ - சதயம்-பூரட்டாதி ¾

கும்பராசி 9 பாதங்களும் சுபபலன் தரும். பணவருமானம் தரும். குல சம்பிரதாயங்களில் நல்லவித செலவும் ஏற்படும். உத்தியோகம் தொழில் துறைகளில் மேன்மை ஸ்திதியை ஏற்படுத்தும். எல்லாம் தெய்வ கடாக்ஷத்தில் நல்ல விதமாக நடந்து கொண்டிருக்கும். நவம்பர் 18, 19, 20 தேதிகள் சந்திராஷ்டமம். வெள்ளி சனி சுபம்.

12. மீனம்:- பூரட்டாதி ¼ உத்திரட்டாதி - ரேவதி.

மீனராசி 9 பாதங்களும் மிச்சிரபலனை நடக்கும். நல்லபண வருமானம் தரும். இஷ்டமித்திர பந்துக்கள் வருகை தருவர். மனைவி மைந்தர்களுக்கு சௌகர்யம் தரும். எல்லாக்காரியங் களும் மதிப்புடன் நடந்து கொண்டிருக்கும். நவம்பர் 21, 22 தேதிகள் சந்திராஷ்டமம். ஞாயிறு திங்கள் சுபம்.

---

17—10—84 புதன், துலாவிஷு புண்ணியகாலம். மயிலாடுதுறை, வள்ளலார்கோயில், திருவையாறு முதலிய தலங்களில் துலாவிஷு தீர்த்தம். திருக்கடவூர் ஸ்ரீ காலசம்ஹாரமூர்த்திக்கு அபிடேகம். சீகாழியில் ஸ்ரீ உமாமகேசுவரருக்கு உச்சிக்காலத்தில் புழுக்காப்பு. மயிலாடுதுறை தலைக் காவேரி முதலிய இடங்களில் துலாஸ்நான ஆரம்பம். திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம் 25 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் குருபூஜை.

19—10—84 வெள்ளி, ஆயில்யவிழா, தருமையாதீனம் 10 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சிவஞானதேசிக சுவாமிகள் குருபூஜை.

21—10—84 ஞாயிறு, திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம் 2௦ ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் ஞானபீடம் அமர்ந்தநாள்.

22—10—84 திங்கள், சோமவாரப் பிரதோஷம். மாத சிவராத்திரி, செவ்வாய் விடியற்காலை நரகாசதுர்த்தசி ஸ்நானம்.

23—10—84 செவ்வாய், தீபாவளிப் பண்டிகை.

24—10—84 புதன், சர்வ அமாவாசை, மயிலாடுதுறை வள்ளலார் கோயில் ஸ்ரீ மேதா தக்ஷிணாமூர்த்தி கங்காதேவியுடன் காவிரியில்தீர்த்தம்கொடுத்தருளல். கேதாரகௌரிவிரதம் வேளூர், மயிலாடுதுறை குமரக்கட்டளை, சீகாழி, திருச்செந்தூர், பழனிமுதலியதலங்களில் கந்தசஷ்டிஉற்சவம்

25—10—84 வியாழன், ஸ்ரீ மெய்கண்டார் குருபூசை,

26—10—84 வெள்ளி, ஸ்ரீ பூசலார் நாயனார் குருபூஜை.

28—10—84 ஞாயிறு, ஸ்ரீ ஐயடிகள்காடவர்கோன்நாயனார் குருபூஜை.

29—10—84 திங்கள், ஸ்கந்தசஷ்டி. சூரசம்ஹாரம். வேளூர், மயிலாடுதுறை குமரக்கட்டளை, திருச்செந்தூர், பழனி முதலிய தலங்களில் சூரசம்ஹாரம்.

30—10—84 செவ்வாய், வேளூர் ஸ்கந்தசஷ்டி உற்சவ தீர்த்தம்.

2—11—84 வெள்ளி, வேளூர் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமி திருவீதியுலாக்காட்சி. கிருதயுகாதி.

6—11—84 செவ்வாய், மயிலாடுதுறை, வள்ளலார்கோயில் முதலிய தலங்களில் துலாஉற்சவாரம்பம். பிரதோஷம்.

7—11—84 புதன், ஸ்ரீ திருமூலநாயனார் குருபூஜை.

8—11—84 வியாழன், பௌர்ணமி விரதபூசை. அன்னாபிஷேகம். தருமையாதீனம் 7 ஆவது குருமகாசந்நிதாம் ஸ்ரீலஸ்ரீ திருவம்பலதேசிகசுவாமிகள் குருபூஜை. தருமையாதீனம் 9 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ திருநாவுக்கரசு தேசிகசுவாமிகள்குருபூஜை.நெடுமாறநாயனார்குருபூஜை.

9—11—84 வெள்ளி, வேளூர்க்கிருத்திகை. தருமை சண்முகர் கிருத்திகை அபிஷேகம். கிருத்திகை விரதம். ஸ்ரீ இடங்கழி [ நாயனார் குருபூஜை.

12—11—84 திங்கள், சங்கடஹர சதுர்த்தி.

13—11—84 செவ்வாய், திருக்கடவூர் ஸ்ரீ முனிசுவர பூஜை.

14—11—84 புதன்,துலாஉற்சவத்திருத்தேர்.ஸ்ரீசத்திநாயனார்குருபூசை

15—11—84 வியாழன், கடைமுகஸ்நானம். மயிலாடுதுறை ...

# பதி - பசு - பாச இயல்பு

## பதியியல்பு

பலகலைஆ கமவேதம் யாவையினும் கருத்துப்
பதிபசுபா சம்தெரித்தல் பதிபரமே அதுதான்
நிலவுமரு வுருவின்றிக் குணங்குறிகள் இன்றி
நின்மலமாய் ஏகமாய் நித்த மாகி
அலகில்உயிர்க்கு உணர்வாகி அசல மாகி
அகண்டிதமாய் ஆனந்த வடிவாய் அன்றிச்
செல்வரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாகிப் பெரிதாய்த்
திகழ்வதுதற் சிவம்என்பர் தெளிந்து ளோரே.

## பசுவியல்பு

எண்ணரிதாய் நித்தமாய் இருண்மலத்தி னழுந்தி
இருவினையின் தன்மைகளுக்கு ஈடான யாக்கை
அண்ணல்அரு ளால்நண்ணி யவையவராய் அதனல்
அலகில்நிகழ் போகங்கள் அருந்து மாற்றல்
புண்ணியபா வம்புரிந்து போக்குவர வுடைத்தாய்ப்
புணரும்இருள் மலபாகம் பொருந்தியக்கால் அருளால்
உண்ணிலவும் ஒளிஅதனல் இருள்அகற்றிப் பாதம்
உற்றிடும்நல் பசவருக்கம் எனவுரைப்பர் உணர்ந்தோர்.

## பாசவியல்பு

ஏகமாய்த் தங்கால எல்லைகளில் மீளும்
எண்ணரிய சத்தியதாய் இருள்ஒளிர இருண்ட
மோகமாய்ச் செம்பிலுறும் களிம்புஏய்ந்து நித்தம்
மூலமல மாய்அறிவு முழுதினையும் மறைக்கும்
பாகமாம் வகைநின்று திரோதான சத்தி
பண்ணுதலால் மலம்எனவும் பகர்வர்அது பரிந்து
நாகமா நதிமதியம் பொதிச்சடையான் அடிகள்
நணுகும்வகை கருணைமிக நயக்கும் தானே.

— உமாபதிதேவ நாயனர்,
( சிவப்பிரகாசம் )